ஓம்:
சேந்திலாண்டவன் துணை. 384

# இராஜா ரகுபதி சிங்

## சரித்திர சம்பந்தமான

## ஓர் தமிழ் நாடகம்.


ஆசிரியன்

**N. விசுவநாத ஐயர்**

**தஞ்சை**


இந் நூலாசிரியர் இயற்றிய ஏனைய தமிழ் நாடகங்கள்:—
இராஜசேகரன், வீரஸிம்ஹன், ஸ்ரீ ராமதாஸ், அப்பூதி அடிகள்,
கண்ணப்பன், மாத்ரு பக்தி, வீர பத்னி முதலியன




பதிப்பகம்
ஸ்ரீ ஷண்முக அச்சுக்கூடம், தஞ்சாவூர்.




1940

[விலை ரூபாய் ஒன்று.



ஆண்டவன் அடிகளை அடைந்த

**ஸ்ரீ. A. சையட் இப்ராஹீம் B. A.**

தஞ்சை (Young Men's Literary Association) ஸ்ரீ குமரகான சபையை 1916௵ ஸ்தாபிதஞ் செய்து சுமார் 22 ஆண்டுகள் அதன் காரியதரிசிப் பதவியை வகித்துத் தொண்டாற்றிய பேர்அறிஞர். நாடகக் கலையுலகில் ஓர் ஜோதியாய் தோன்றி, பல இளைஞர்களுக்கு, அக்கலையில், தக்க ஆர்வத்தையும், பயிற்சியையும், ஆதரவையும் அளித்த பேராசிரியர். நடன், நாடக நூலாசிரியன் என்ற எனது எந்த வெற்றிக்கும் காரணராக நின்ற அரிய நண்பர்

**ஸ்ரீ. A. சையட் இப்ராஹீம் B. A., அவர்களுக்கு**
இச் சிறிய நூலை அன்புடன் சமர்ப்பிக்கின்றேன்.

கரந்தை R. மாணிக்கவாசகன் தஞ்சாவூர்,

எழுத்தாளர் 7—5—1940.

புகழ் நிறை நாடக நூலாசிரியர் தஞ்சை ஸ்ரீ. N. விசுவநாதன் எழுதிய "இராணு ரதுபதிசிங்" எனும் நாடகத்தில் பாரததேவியின் வீரப்புதல்வர் களான இராஜபுத்திரர்களின் ஒல்கா ஆற்றலும், உலையா உறுதியும், அவர் தம் குல விளக்காய்த் திகழ்ந்த பெண்மணிகளின் கற்பும் கடமையும், அக்பரின் கருணை நிறைந்த உயரிய உளமும், சமரச அரசியல் முறைமையும் அழகுபெறச் சித்தரிக்கப்பெற்றுள்ளன.

முதற்களத்தில் காணும் இராணுவின் உறுதியும் வீரமும் ஆறுவது களத்தினில் சோகமும் தளர்ச்சியுமாக மாறி, எழாம் களத்தில், உண்மை வீரனின் வாழ்க்கை லட்சியமாய்க் கதித்தெழுந்து பதினொன்றும் களத் தினிறுதியில் வாய்மையும் மரபும் காக்கும் வீரத்தியாகியின் அருஞ்செய லாய்க் காட்சியளிக்கின்றன. இவ்வித நிகழ்ச்சிகளில் ஆசிரியரின் ஆற்றல் அத்துணையும் தன் முழு உருவத்தோடு தோன்றிப் படிப்போருளத்தை இறும்பூது எய்தச்செய்கிறது.

இனி பதின்மூன்றும் களத்தில் அக்பரின் உள்ளக்கனிவும்,பதினான்காம் களத்தில் அக்கனிவின் செயலும் விளங்கத் திறம்பட அமைத்து, நண்பர் விசுவநாதன் ஓர் சிறந்த நடர் என்பதையும் நிலை நிறுத்தியுள்ளார். கதையின் தொடர்ச்சியான அமைப்பும், மகிழ்ச்சியான முடிபும் அவரவர் தன்மைக் கேற்ற வசனங்களும் மிக மிகச்சிறந்த முறையில் எழுதப்பெற்றுள்ளன.

அன்பர் ஸ்ரீ. விசுவநாதன் எழுதிய பல நாடகங்களின் முதிர்ந்த அனுபவ மாய், பல ஆண்டுகளாக நாடக அன்னைக்காற்றி வரும் அரிய தொண்டின் பயனாய், "இராணு ரதுபதிசிங்" தோன்றியுளதெனக் கூறுவது மிகையாகாது

இவை நிற்க, இத்துடன் இணைக்கப்பெற்றுள்ள நகைச்சுவைக்கோர்வை நாடகத்தின் இயற்கை எழிலை அதிகப்படுத்துவதாய், இரத்தின மணிகளை ஊடுருவிச்சென்று மாலையாய்ப் பிணிக்கும் பொற்கம்பிபோன்றமைந்துளது குறிப்பிடத்தக்கதாகும்.

நம் நாட்டில் திகழ்ந்த வீரர்களின் வாழ்க்கைகளை, நாடகக்கலை அருகிப் போன இந்நாளில், நாடகங்களாக வெளியிட்டு மக்களின் உள்ளத்தில் கலை ஆர்வத்தையும் வீர உணர்ச்சியையும் தட்டி எழுப்ப உழைத்துவரும், மறு மலர்ச்சியாளராகிய ஸ்ரீ. விசுவநாதனவர்கள் எல்லா நலன்களும் பெற்றுய்ய இறைவன் நல்லருள்புரிவானாக.

R. மாணிக்கவாசகன்

# முன்னுரை.

பாரசிக மொழியில் உள்ள சரித்திர சம்பந்தமான சில பழய கையெழுத்துப் பிரதிகளைக்கொண்டு "இராணா ரகுபதி சிங்" எனும் ஓர் இரஜபுத்திர வீரனின் சரிதை; பத்திரிகை உலகில் புகழ்பெற்ற MR. C. N. ZUTSHI M. R. A. S. (LON.) அவர்களால், சித்தரிக்கப் பெற்று, முதன் முதலாக "ஹிண்டு" வாரப்பதிப்பில் தோன்றியது. (அதனை இப்புத்தகத்தின் 91-96 பக்கங்களில் பதிப்பித்துள்ளேன்)

உயரிய வீரமும், மகத்தான தியாகமும் நிறைந்த அக்கதையினை ஓர் நாடகமாக மாற்றி அமைக்க ஆசைகொண்ட யான், MR. ZUTSHI அவர்களை, அதற்கு அநுமதி தர வேண்டினேன். அக்கலைஞரும், என் வேண்டுகோளை ஏற்று, வெகு சந்தோஷத்துடன் அநுமதி அளித்தனர். அப் பேரறிவாளருக்கு என்னுடைய மனமார்ந்த நன்றி என்றும் உரித்தாகுக. இன்னும், இந்நூலை வெளியிடுவதில் போதிய ஊக்கமும் உற்சாகமும் அளித்த, எனது நண்பர், பண்டிட் ஸ்ரீ. P. S. செட்டியார் அவர்களுக்கும் எனது, அன்பான வந்தனத்தைச் செலுத்துகின்றேன்.

எனது ஏனைய நூல்களை ஆதரித்து வருவதுபோல் இதனையும் அன்புடன் ஏற்று, போதிய உதவி அளிக்குமாறு கலை அன்பர்களை பெரிதும் வேண்டுகின்றேன்.

இந் நாடகத்தையாவது அல்லது எனது இதர நாடகங்களையாவது நடிக்க விரும்புகிறவர்கள் ஒவ்வொரு முறையும் எனது முன் அனுமதிபெற்ற பின்னரே நடித்தல் வேண்டும், என்பதை மீண்டும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

ஸ்ரீ ஸ்கந்த பவனம்
தெற்கு அலங்கம், தஞ்சாவூர்.

N. விசுவநாதன்
நாடக நூலாசிரியர்.

உ

செந்திலாண்டவன் துணை.

# இராணா ரகுபதிசிங்

ஓர்

## சரித்திர சம்பந்தமான நாடகம்

[1576-ஆம் ஆண்டு பரத கண்டத்தைத் தன் குடைக்கீழ் ஆள நினைத்தார் அக்பர் மகாச் சக்கரவர்த்தி. நன்கு பயிற்சி பெற்ற சேனைகளைக் கொண்டு பலமுறையும் இராஜபுதனத்தைத் தாக்கினர். மானமும் வீரமுமே தமது கொள்கை, எனப்போரிட்டு, வீரச்சாவை அடைந்தனர் பல வீர இராஜபுத்திரர்கள். உண்மை வீரத்தைப் புகழ்ந்தார் அக்பர். யுத்தம் நின்றபாடில்லை. "என்னே! இவர்களின் மனோ வலிமை! அஞ்சா நெஞ்சம் படைத்த இராஜபுத்திரத் தலைவனான இராணா ரகுபதிசிங் நம் பக்கலில் இருந்தால்" —எனப் பெருமூச்சு விட்டார் அக்பர்.

இராஜபுத்திரர்களுக்குப் பெரும் சோதனை காலம் முகலாய அரசரின் முன் நிற்க முடியவில்லை. அரவல்லி மலைச்சாரலில், ஒளிந்து கொண்டனர். “அக்பரின் அதிகாரத்துக்கோ அடங்குவது? சொந்த நாட்டையோ விடுவது? எனக் கொக்கரித்தான், சௌந்தர்யமும், சௌரியமும் நிறைந்த இணரா ரகுபதிசிங். பதறிய உள்ளத்துடன் சிதறிய வீரர்களை ஒன்று கூட்டினான். கவலை யென்னும் இருளை 'வீர உரை' யென்னும் ஒளியினால் அகற்ற உறுதி கொண்டான்.]

## களம் 1.

**இடம் :—** அரவல்லி மலைச்சாரல்.

**காலம் :—** மாலை.

நடர் :— இ ரா ணா ர கு ப தி சி ங், பிரதாபசிம்ஹன், இரஜபுத்திர வீரர்கள்.

[இராணாவின் வீரர்கள், ஓர் பெரு மாத்தினடியில் ஆழ்ந்த யோசனையுடன், இரகுபதி சிங்கை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். **பிரதாப சிம்ஹன்** பின் தொடர இராணா அங்கு வர, வீரர்கள் யாவரும் வணங்குகிறார்கள்.]

இரா. [பிரதி வந்தனஞ் செய்து] எனது நண்பர்களே! இரஜபுத்திர வீரர்களே! எனது வேண்டுகோளுக்கு இணங்கி, தளரா ஊக்கத்துடன் மீண்டும் என்னை இங்கு சந்தித்தற்கு என் உள்ளன்புடனே வெளியிடும், நன்றியை ஏற்றுக் கொள்ள வேண்டுகின்றேன். மானம் காக்க முன் வந்த தீரர்களே!

நமது முன்னோர்களின் வீர வாழ்க்கையையும், வீரச்சாவையும், தாய் நாட்டிற்கு அவர்கள் செய்த பெரும் தியாகத்தையும் நினைத்துப் பாருங்கள். இதுபோது நாமிருக்கும் நிலையையும் சற்றே சிந்தித்துப் பாருங்கள். மனம் பதறுகின்றது. நெஞ்சம் துடிக்கின்றது. வீரமாபிற் தோன்றிய என் நண்பர்களே! பார்த்தீர்களா அக்பரின் செய்கையை! இராஜபுதனத்திலுள்ள இராஜபுத்திரர்கள் யாவரும் தன் அடி வணங்க வேண்டுமாம். குலப்பெருமையை மறக்க வேண்டுமாம். இல்லையேல் நமது வம்சத்தின் வேரை அடியுடன் நீக்கி விடுவனும். இதைப் பார்த்தும், கேட்டும் நாம் எவ்வாறு நிம்மதியுடன் இருக்க முடியும்!

பிரதா. மகாராஜ்! அக்பரை மாத்திரம் நொந்து என்ன பயன்? அக்பரின் அன்பைப் பெறலாம், பரம சுகத்துடன் வாழலாம் என நினைத்து, அவனுக்கு அடிமைப்பட்டு, தமது குலம், கோத்திரம், மானம், சௌரியம் முதலிய பெருமைகளை மறந்து அவனுடன் கூடிக் குலவும் சில இராஜபுத்திரத் துரோகிகளையன்றோ நோவவேண்டும்.

இரா. பிரதாபசிங்! எதை நினைக்கினும் மனம் குழம்புகின்றது. அந்தத் துரோகிகளின் நடத்தையினுலேயே நம் இராஜபுதனத்தையும், மனைவி மக்களையும், நம்மைக் காத்து வந்த சுதந்தர தேவியையும் விட்டு, இந்த ஆவல்லி மலைச்சாரலையடைய நேர்ந்தது. கேவலம் விலங்கினங்களைப் போல் அலைந்து, மறைந்து கொள்ளைக்காரர்களின் வாழ்க்கையைப் பின்பற்ற நேரிட்டது. அக்பரின் கோபக் கனலுக்கும் பாத்திரராகச் செய்தது. வீர சகோதரர்களே! கடந்ததைக் குறித்து யோசிப்பதில் பயனில்லை. இந்த இராணு ரகுபதி சிங் இதுவரை ஒருவருக்கும் அஞ்சினதில்லை. இனி அஞ்சப்போவதுமில்லை. மானமே எனது உயிர். உண்

மையே எனது தெய்வம். வீரனாக மடிவதே எனது கொள்கை. இக்கொள்கையை உடைய வீரர்களே இங்கே கூடியுள்ளார்கள் என்பதையும் நான் நன்கு அறிவேன். அன்பர்களே! அக்பர் நம்மை அடிமையாக்க விரும்புகின்றான். நாமோ சுதந்தரம்பெற விரும்புகின்றோம். மானம் பெரிதா? உயிர் பெரிதா? அடிமை வேண்டுமா? சுதந்தரம் வேண்டுமா? வீரர்களே! இனி தாமதிக்கக் கூடாது. கடைசி முறையாகக் கூறுகின்றேன். உயிரைக் கொடுத்தேனும் நமது இராஜபுதனத்தைப் பெறவேண்டும். இல்லையேல், மாற்றானால் வருந்தும் நம் சுதந்தர தேவியின் காலடியில் உயிர் விடவேண்டும்.

பிரதா. பிரபோ! உயிரினும் மானமே பெரிது, என்பதை அறிவோம். அடிமை அகல வேண்டும். சுதந்தர தீபம் பிரகாசிக்க வேண்டும். இல்லையேல், இந்த இராஜபுத்திரர்களின் வம்சமே வீர சுவர்க்கமடைய வேண்டும். இது சத்தியம்.

இரா. சபாஷ் வீரர்களே! எடுங்கள் வாளை; வணங்குங்கள் நமது சுதந்தர தேவியை. (யாவரும் வாளை உருவி வணங்குகிறார்கள்) ஹா! ஹா! அதோ! அதோ! நமது சுதந்தர தேவி! அன்னையே! அடி வணங்கினோம். மனம் பதற வேண்டாம். கண்ணீர் சொரிய வேண்டாம். மானத்தை ஒருக்காலும் விடோம். நின் கால்தளையைத் தகர்த்தெறிகின்றோம். எமது ஜய பேரிகையைக் கேட்டு நீ ஆனந்தத் தாண்டவம் செய்வாய். கடல் போன்ற இரத்தத்தைக் கண்டு காலனும் கதறுவான். அஞ்சேல்! அஞ்சேல்.... (எழுந்து, வாளை வீசி) சுதந்தர தேவிக்கு!

[மற்ற வீரர்களும் எழுந்து, வாளை உயர்த்தி "ஜய்" என்ற கோஷத்துடன் ஓடும் இராணாவைப் பின் தொடர்கின்றார்கள்.]

[முதற் களம் முடிகிறது]

## களம் 2.

**காலம் :—** காலே.

**இடம் :—** டெல்லியில் ஓர் தெரு.

நடர் :— ஸபக்டஜின், தான்ஷேன், ஜயசந்திரன், குடிகள், பறைசாற்றுபவன்.

[மக்கள், அங்கு மிங்கும் நடந்துகொண்டிருக்கிறார்கள். **ஸபக்டஜின்** கோபத்துடன் பிரவேசிக்கின்றான். மறுபடியும் தான் வந்த வழியைப் பார்த்து.]

ஸபக். புதிய உணர்ச்சியற்ற கிழங்கள். என்ன தெரியும் இவர்களுக்கு. இவர்கள் சொற்படி நடந்தால், நமக்குள் எந்தக் காலத்தில் ஒற்றுமை ஏற்படும்.... (சிறிது தூரம் நடந்து மீண்டும் அப்பக்கம் திரும்புகிறான். **தான்ஷேன்** பிரவேசித்து இவனைக் கவனித்து நிற்கிறான்.) நமது அக்பர் மகானின் கொள்கையைச் சிதைக்க உங்களால் ஒரு பொழுதும் முடியாது! இந்து-முஸ்லீம் ஒற்றுமையைக் கெடுக்க யோசிக்கும், எந்தச் சமுகப் பாபிகளையும், இவ் வாள் கொண்டு வீசுவேன். (வாளை உருவ, எதிரில் தான்ஷேன் நிற்பதைக்கண்டு பயந்து,) சலாம்! சலாம்!! சலாம் !!

தான். (பிரதி வந்தனம் செய்து) சபக்! கியா சமாசாரம்?

ஸபக். தான்ஷேன்ஜி! தாங்களே சொல்லுங்கள். முகம்மதியர்கள் நம் இராஜ்யத்தில் மிகக் குறைவு. அதிலும் சிலரை நம்பு

வதற்கில்லை. இந் நிலையில் பெரும்பாலான இந்துக்களுடன் நமது ஷாஇன்ஷா நட்புரிமை பாராட்டி வருவதுபோல், நானும் செய்ய நினைத்தால்,........

தான். ஏன் நமது சக்கரவர்த்தி இராஜபுத்திர ஸ்திரி இரத்தினங்களை மணந்து கொள்ளவில்லையா? இவ்விதமான பரந்த நோக்கமும், சிறந்த கொள்கையும் எந்த அரசனிடம் உண்டு. அவரைப் பழிகூறும் சிறு மதி படைத்தவன் யாவன்?

ஸபக். பிரபோ! என் சகோதரி ஸெபுனிசாவை, நமது வீரத் தளகர்த்தர் இராஜா தோடர்மால் பஹதூர் அவர்களின் சகோதரருக்கு, மணம் செய்ய எண்ணினேன். இந்தக் கலப்பு மணம் கூடாதென்று, எனது பெற்றோர்களே தடுக்கின்றனர்.

தான். ஹா! இந்தச் சம்பந்தம் கிடைக்கவேண்டுமே. இருக்கட்டும், நான் தங்கள் பெற்றோர்களைக் கண்டு பேசுகின்றேன். தாங்கள் கவலைப்பட வேண்டாம். வெகு சீக்கிரத்தில், நம் நாட்டில் இந்து முஸ்லீம் ஒற்றுமை ஏற்படத்தான் போகின்றது. ( பறை சப்தம் கேட்டல் ) என்ன விசேஷம். முரசொலி கேட்கின்றதே!

(ஜயசந்திரன் பின்தொடர, பறை சாற்றுவோன் பிரவேசிக்கின்றான் ... ஜனங்கள் கூடுகின்றார்கள்.) ஜயசந்திரன் மக்களின் கூச்சலை, கையினால் அமர்த்தி அக்பர் சக்கரவர்த்தியின் அறிக்கையைப் படிக்கின்றான்.]

ஜயசந். "கருணை பொழியும் நமது மகாராஜ அக்பர் நீடூழி வாழி! மகா ஜனங்களே! பெரியோர்களே! கேளுங்கள். இதனால் நமது ஆளுகைக் குட்பட்ட எல்லாக் குடிகளுக்கும் தெரிவிப்பதாவது, எல்லா மதங்களிலும் உண்மை உண்டு என்பது எமது கொள்கையாதலின்,

இந்துக்கள், முகம்மதியர்கள், ஜைனர்கள் முதலியவர்கள் தங்கள் தங்கள், குல ஆசாரப்படி பயமின்றித் தேவ ஆராதனை செய்யலாம். முகம்மதியர் அல்லாதார், நமக்குச் செலுத்தி வரும் 'ஜஸியா' என்னும் வரியையும் இனி செலுத்த வேண்டியதில்லை (சபாஷ்! ஆஹா! இவரன்றே அரசர்." என்ற கோஷம் கூட்டத்தினிடையே உண்டாகிறது.) மதங்களில் வேற்றுமை இருந்த போதிலும், நாட்டின் நலங்கருதி யாவரும் ஒற்றுமையுடன் வாழ வேண்டுகிறோம். இன்னும் இந்து முஸ்லீம் ஒற்றுமைக்காகப் பாடுபடும் ஒவ்வொருவருக்கும், அரசாங்க ஆதரவு தக்கப்படி அளிக்கப்பெறும்."

ஸபக். இந்து-முஸ்லீம்கள் என்றும் வாழி.

ஜயசங். அக்பர் மகாராஜ்கி—

மக்கள் யாவரும் 'ஜய்' எனக் கோஷமிடுகிறார்கள்.

தான். (முகம்மதியர்களும், இந்துக்களும் பாரத நாட்டில் என்றும் ஒற்றுமையுடன் வாழ வேண்டும் எனும் கருத்தையுடைய ஓர் பாட்டைப் பாடுகிறார். பாட்டு முடிந்ததும் 'அல்லாஹு-அக்பர்' என்ற கோஷத்துடன் கூட்டம் கலைகிறது.)

[ இரண்டாம் களம் முடிகிறது ]

## களம் 3.

இடம் :— அக்பரின் மாளிகையில் ஓர் அறை.

காலம் :— காலை.

நடர் :— அக்பர், அபுல்பசல், தான்ஷேன், ஜயசந்திரன், இராஜா தோடர்மால், ஏகநாத்.

[ அக்பர் யோசனையுடன் அமர்ந்திருக்கின்றார் இரு பக்கங்களிலும், அபுல் பசலும், தான்ஷுனும் வீற்றிருக்கின்றார்கள். ]

அக்பர். மிகவும் ஆச்சரியம்!............பசல்ஜி! நன்றாகப் பழக்கப் பெற்ற சைன்யங்களைக் கொண்டு நமது தளகர்த்தர் இராஜாதோடர்மால், இன்னும் அந்த இரகுபதிசிங்கைப் பிடிக்க முடியவில்லை யென்றால் அவமான மல்லவா ?

அபுல். ஹஸூர்! இராஜாதோடர்மாலைப் போன்ற சத்தியவீரன் உயிருடன் இருக்கும்வரை நமக்கே ஜயம். கவலை வேண்டாம். இரகுபதிசிங்கும் சிறந்த வீரனே! அவனை வெல்வதென்றால் எளிதாக முடியாது.

தான். நன்று கூறினீர்கள். சர்க்கார்! சமீபத்தில் நடந்த ஒரு சிறு யுத்தத்தில், நம் பெரும் படைகளை, அஞ்சாது எதிர்த்து யுத்தகளத்தையே இரத்தகள மாக்கிவிட்டான். ஆ! அவனை நினைக்கும் பொழுதே என் நெஞ்சம் பரவசமடைகின்றது. தேசபக்தி நிறைந்த மகாவீரன் அன்றோ அவன்!

அக்பர். தான்ஷன்ஜி! இராஜபுத்திரர்கள் சத்தியவான்கள். உயிரை விட மானமே சிறந்த பூஷணம் என்ற நம்பிக்கை கொண்டவர்கள். செய்த நன்றியை என்றும் மறக்காதவர்கள். இக் காரணங்களினாலேயே, அவர்கள் என் உள்ளம் கவர்ந்தனர்.

['வழி விடுங்கள்! எனது அரசரை உடனே காணவேண்டும். தடை செய்யாதீர்கள்' என்னும் வார்த்தைகள் அக்பரின் காதில் விழுகின்றன]

அக்பர். ஹா! பசல்ஜி! அங்கு என்ன சப்தம்! (ஜயசந்திரன் ஓடி வணங்குகின்றான்.) சிப்பாய்! வெளியில் என்ன சப்தம்.

ஜயசந். ஒரு வயோதிகப் பிராமணர் அழுதுகொண்டு உங்களை நாடி வந்திருக்கிறார். இது சமயமல்லவெனத் தெரிவித்தும் ஒரே பிடிவாதமாக சர்க்காரைக் காண வேண்டுமென் கிறார்.

அக்பர். சீக்கிரமே அவரை அழைத்துவா. (ஏகநாதர் துக்கத்துடன் பிரவேசித்து வணங்குகிறார்.) ஐயோ! பாவம்!

ஏகநா. காருண்யமுள்ள எங்கள் பாதுஷாவே! அபயம் தாரும். என் ஒரே குமாரியைக் காரும். சண்டாளச் சுற்றம், அவளை உயிருடன் கொல்லத் தீர்மானித்துவிட்டது.

அக்பர். பிராமண்! எதற்காக.

ஏகநா. பிரபோ! ஏழாவது வயதில் என் குமாரிக்கு மணம் ஆயிற்று. இன்னும் நான்கு வருஷங்கள் பூர்த்தியாக வில்லை. இன்று அதிகாலையில் அவள் புருஷன் இறந்தான். பாதுஷா! என்னையும் அழைத்தேகாமல் இவ்வுலகை மறந்தான். ஹா! என் செய்வேன். மகாராஜ்! என்

குமாரி அவனுடன் இறக்க வேண்டுமாம். ஐயோ ! உடன் கட்டை ஏறவேண்டுமாம்........பிரபோ ! என் வயிறு எரிகின்றதே ! சின்னஞ் சிறுமியை அக்னிபகவானுக்கு அர்ப்பணம் செய்து விட்டு இவ்வுலகில் நான் எங்ஙனம் உயிர் வாழ்வேன். அப் பாதகர்கள் இந்நேரம் அவளுக்கு மஞ்சள் புடவை அணிந்திருப்பார்களே ! தெய்வமே ! இதென்ன கொள்கை. இதென்ன சமூகம் ! ஆ நந்தினி ! நந்தினி ! ! என் அறிவு கலங்குகின்றது .... இதோ ! இதோ ! நானும் உன்னுடன் வருகின்றேன்-நில் !.... ஹா ! ஹா ! ஹா ! ( சிரித்துக்கொண்டே கீழே விழுந்து மூர்ச்சையாகின்றான். நெற்றியில் உதிரம் பெருகுகின்றது. )

அக்பர். ஆ பசவ்ஜி ! பாவம் ! ஜயசந்த் ! இப் பிராமணனைச் சீக்கிரமே நமது வைத்தியசாலைக்குத் தூக்கிச் சென்று, வேண்டிய சிகிச்சைகளைச் செய்து, பத்திரமாகக் காப்பாற்ற வேண்டும். ( சில காவலர்களின் உதவியினால், ஜயசந்திரன், அந்தணனை எடுத்துச் செல்லுகின்றான். ) அல்லாஹோ ! இது என்ன கொடிய வழக்கம் ! பெண்களைப் பொசுக்கும் இந்தப் பேய் வழக்கம் என் மனத்தை மிகவும் வாட்டுகின்றது........இருக்கட்டும். தான்ஷன் ! தக்க வீரர்களுடன் சென்று அந்தப் பிராமணரின் குமாரியைச் சீக்கிரமே காப்பாற்றி வாருங்கள். எவரேனும் தடை செய்தால் கைதி யாக்குங்கள்.

தான். அச்சா ! மகாராஜ். ( தான்ஷன் வணங்கிச் செல்லல். )

அபுல். ஹஸூர் ! இந்து—முஸ்லீம் ஒற்றுமைக்காகத் தாங்கள் செய்துவரும் மகத்தான ஏற்பாடுகளை நமது விரோதிகளும் புகழ்ந்து பேசுகின்றனர். இன்னும் இந்துக்களிடையே உள்ள ' உடன் கட்டை ' ஏறும் கொடிய வழக்கத்தையும், தாங்கள் நிறுத்துவீர்களேயாயின், வீரிட்டுக் கதறும்

விதவைகளின் வாழ்த்தும், ஆண்டவன் அருளும் நிச்சயமாகத் தங்களுக்குக் கிட்டும் என்பது அடியேனது எண்ணம்.

அக்பர். பசல்ஜி! இந்துக்களைக் கலந்து ஆலோசித்துக்கொண்டு, வேண்டிய ஏற்பாடுகளைச் சீக்கிரமே செய்யும். (ஜயசந்திரன் பிரவேசம்.)

ஜயசந். ஷாஇன்ஷா! யுத்தகளத்திலிருந்து, நமது சேனைத் தலைவர் இராஜா தோடர்மால் பகதூர், சந்நிதானம் நாடி வந்திருக்கிறார்.

அக்பர். பசல்ஜி! சீக்கிரமாக அவரை அழைத்துவாரும். (அபுல்பசல், ஜயசந்திரனுடன் சென்று, இராஜாதோடர்மாலுடன் திரும்பி வருகிறார்.)

தோட. சர்க்கார்! சலாம்! சலாம்!! சலாம்!!!

அக்பர். அச்சா! தோடர்மால்! என்ன உமது கையில் காயம்.

தோட. சர்க்கார்! இறைவன் கீர்த்தியையும் நீண்ட ஆயுளையும் தமக்கு அளிக்க வேண்டுகின்றேன்....மாட்சிமை தங்கிய மன்னா! இரணகளத்திலேயே சதா காலமும் திரிபவனுக்குக் காயங்கள் ஏற்படுவது இயற்கையே.... ஹஸூர்! இராணா ரகுபதிசிங் மகா பராக்கிரமசாலி! அஞ்சா நெஞ்சமுடைய தைரியவான்! மகா தந்திரசாலி. கடந்த நடு இரவில் யுத்தகளைப்பினால் நமது வீரர்கள் நன்றாக உறங்கும் சமயம், திடீரெனத் தாக்கினன். கைகள் சேதிக்கப்பட்டன. தலைகள் வெட்டிச் சரிக்கப்பட்டன. எங்கும் இருள். ஒன்றும் புரியவில்லை. அஞ்சேல்! எனச் சங்கநாதம் செய்து, வாளை எடுத்தேன். அம்பிகையின் அருளால், நம் வீரர்களை, ஒன்று கூட்டி எதிர்த்தேன்.

அக்பர். அச்சா ! பஹா¬த் குஷிஹை ! பின்னர்.

தோட. இரகுபதி சிங்கின் பல வீரர்களை இரணகளத்திற்கு விருந்தளித்தேன். அதுசமயம், மகா வீரனும் இரகுபதிசிங்கின் கோட்டையைக் கைப்பற்றி வந்த நமது உபதலைவர், அப்துல் கபர்கானும் தன் சைன்யங்களுடன் சமயத்தில் வந்து பின் புறம் தாக்கினர்.

அபுல். ஆ ! பர்வர்திகார் ! இரகுபதி சிங்கின் கோட்டை பிடிபட்டதா ?

அக்பர். அச்சா ! தோடர்மால்....பின்னர் என்ன ஆயிற்று ?

தோட. பிரபோ ! பின்னர் சிறிது நேரம் கோரமான யுத்தம் நடந்தது. இரகுபதி சிங் கழுத்தில் வாளை வீசினேன். அந்தோ ! குறி தவறியது. நெற்றியில் பாய்ந்தது. அவ்வளவு தான், உடனே மறைந்து விட்டனன்.

அக்பர். மறைந்தானு ! சத் !

தோட. ஆம். மறுநாள் காலையில், யுத்த களத்தில் பூமியின் மீது நாட்டப் பெற்றிருந்த ஓர் வாளின் கைப்பிடியில் இக் கடிதம் காணப் பெற்றது.

அக்பர். கடிதம் - பசல்ஜி ! படியுங்கள் அதை.

அபுல். “தோடர்மால் ! நீயும் ஓர் இராஜபுத்திரன் என்பதை மறந்தாய். குலப் பெருமையைத் துறந்தாய். அம்பிகை பவானி மாதாவின் அருளை அகற்றினுய். இரகுபதி சிங்கின் கோட்டையைப் பிடித்து விட்டோமென்று மமதை கொள்ளாதே. சௌரிய மிருந்தால், என் மனம் என்னும் கோட்டையைப் பிடி பார்போம்—அம்பிகை பவானி தாசன், இரகுபதிசிங்

அக்பர். பஜல்ஜி ! இந்த இரகுபதிசிங் இன்னும் நம்மை அறியவில்லை. இவன் மமதையை இன்னும் ஒடுக்காமல் இருப்பது நமக்குப் பெரும் அவமானம். ஆம். தோடர்மால் ! இராணு ரகுபதிசிங் இறந்தான் என்று அறியும்வரை தாம் உண்மை வீராயின், என்னைக் காணலாகாது.

தோட. ஹா ! ஹா ! சர்க்கார் ! குலப் பெருமையை மறந்து, தம்மை அண்டிய எனக்கோ இவ்வார்த்தை ! ஆ தேவி ! மனம் பதறுகின்றது........ஷாஇன்ஷா ! தாங்கள் கூறிய சொல்லால் என் உள்ளம் துடிக்கின்றது. மன்னிக்க வேண்டும். இத்தகைய சொல்லை கருணாமூர்த்தியாகிய தங்களிடம் நான் எதிர்பார்க்கவில்லை........ மகாராஜ் ! இரகுபதிசிங் தொலைந்தான் என்று இன்னும் 15 தினங்களுக்குள், தங்களுக்குச் சமாசாரம் வாராமற் போனால், வீர மரபில் தோன்றிய இந்தத் தோடர்மால் வீர சுவர்க்கமடைந்தான் என்பதைத் தாங்கள் அறிவீர். கருணை வேண்டும். ( வணங்கி மறைகின்றான். )

அபுல். சர்க்கார் ! தங்கள் சொல் அவர் உள்ளத்தை நன்கு சுட்டுவிட்டது.

அக்பர். ஆம் ! என்னையும் அறியாமல் கூறி விட்டேன். அதை நினைக்க, எனக்கு வருத்தமாக இருக்கின்றது ........ இருக்கட்டும். பசல்ஜி ! ரகுபதிசிங்கின் தலையைக் கொண்டு வருபவர்களுக்குத் தக்க சன்மானம் அளிப்பதாக உடனே பறை சாற்றும்.

அபுல். உத்தரவு. ( தான்ஷன் அவசரத்துடன் பிரவேசித்து வணங்கல். )

தான். ஹ—ஸ—ர் ! சற்று முன்னதாகச் சந்நிதானம் வந்த பிராமணரின் குமாரியைக் காப்பாற்றி வந்திருக்கின்றோம்.

அக்பர். அச்சா ! எங்கே அச்சிறுமி.

தான். தர்பாரின் வெளி வாசலில் காத்திருக்கிருள்.

அபுல். மகாராஜ் ! அந்த வயோதிகரிடம் அவனை அழைத்துச் சென்ருல்........

அக்பர். ஆம் ! இருவரிடத்தும் சந்தோஷத்தைக் காணலாம்.

தான். சர்க்காரின் ஆதரவையும் அவர் பெறக்கூடும்.

அக்பர். உங்கள் இஷ்டப்படியே ஆகட்டும்....( எழுந்து செல்கிருர். இருவரும் பின் செல்கிருர்கள்—போகும்பொழுது ) எவன் உத்தமமான காரியங்களைச் செய்கின்ருனே, அவனுக்கே ஆண்டவன் அருளும், கருணையும் கிட்டும்.

[ மூன்றும் களம் முடிகிறது. ]

## களம் 4.

காலம் :— நள்ளிரவு.

இடம் :— அரவல்லி மலையில் ஓர் குகை.

நடர் :— இராணு ரகுபதிசிங், பிரதாபஸிம்ஹன், பீம்சிங்.

[ நெற்றிக் காயத்துடன் இரகுபதிசிங் ஓர் புறம் உறங்குகின்றான். அவன் காலடியில் உண்மையுள்ள, பிரதாபஸிம்ஹனும், அதற்குச் சற்று அப்பால், சில மெய்க் காப்பாளர்களும் உறங்குகின்றார்கள். தூக்கம் வராமல் பிரதாபஸிம்ஹன் அடிக்கடி பிதற்றுகின்றான். ]

பிரதா. இரக்கம்...........ஒரு நாளுமில்லை!........தேசத் துரோகி இதோ உன் மார்பைப் பிளந்தேன் பார். ஹா! ஹா!! ஹா!!! இராஜா தோடர்மால்! ........ பெயரைப் பார்.... யாரங்கே என் பார்வையை மறைக்கின்றது? (இரகுபதிசிங் பிரதாபைக் கூர்ந்து கவனித்துப் புன்னகை புரிகின்றான்.)... எட்டி நில். ஆ! அவன் மார்பினின்றும் பெருகும் இரத்தத்தைக் கண் குளிரக் காண்கின்றேன். (எழுந்து) இதோ! இதோ!! அவன் மரணக் கூச்சல். எங்கே எங்கே, மற்றொரு முறை கூவு கேட்கின்றேன்........

இரகு. பிரதாப்! என்ன இது!

பிரதா. (பிரமித்து வணங்கி) பிரபோ! ஒன்றுமில்லை....சீ! வீண் பிரமை.

இரகு. ஆம் பிரமையே, இராஜபக்தி நிறைந்த பிரதாப்! இப் பொழுது தோடர்மால் இங்கு அகப்பட்டால்........

பிரதா. அவன் புய வலிமையைச் சிதைப்பேன். இல்லையேல் சுத்த வீரனுகவே மடிவேன். தேசத்துரோகி, சுயநலம் கருதி அக்பரைச் சரண் அடைந்தான். தன் சொந்த நாட்டை மறந்தான். பவானி மாதாவின் அருளை இழந்தான்.

இரகு. என் செய்வது. காலதேவன் இது போது நம்மைப் பெரும் சோதனைக்குள்ளாக்கி வருகின்றான்....பாவம்! பிரதாப்! யுத்த களைப்பினுல் நித்திரை செய்யும் என் தீர வீரர்களைப் பார். எனது கஷ்ட நிஷ்டூரங்களுக்கும், எனது கீர்த்திப் பிரதாபங்களுக்கும் இணங்கிய என் சூர வீரர்களைக் காண். மனைவி, மக்கள், சுற்றம்விட்டு, தேசாபிமானத்திற்காகவும், மானுபிமானத்திற்காகவும் என்னுடன் இக் கொடிய காட்டில் கஷ்டப்படுகின்றனரே. அந்தோ! அதனை நினைக்கும்பொழுது என் நெஞ்சம் புண்ணுகின்றதே. அம்பிகே! பவானிமாதா! நினது அருள் என்று கிட்டும்.

பிரதா. சர்வ சுகங்களையும் விடுத்து, தம் அருமை மனைவியையும், சிறு குழந்தை ஆஜீத் சிங்கையும் மறந்து, தாய் நாட்டின் மானம் காக்க முன்வந்த என் வீரத் தியாகியே! எங்கள் பொருட்டுத் தாங்கள் துயரடைய வேண்டாம். வீர ஸிம்ஹமாகிய தங்கள் அரிய தலைமையின் கீழ், வெகு சீக்கிரம் நாம் சுதந்தரம் அடைவோம்.

இரகு. எவ்விதம் அடைவது. பன்முறை எதிர்த்தும் இது வரைப் பயனில்லையே. சென்ற போரில் நம் கோட்டையைத் தோடர்மால் பிடித்து விட்டான். ஆ! என் மனைவி, குமாரன் இவர்கள் எந்நிலையில் இருக்கின்றார்களோ.... எதற்கும் நமது ஒற்றன் வந்தால் தெரியும்.

பிரதா. மனம் தளர வேண்டாம். முயற்சியுடையோர் இகழ்ச்சி யடையார் (பீம்சிங், கையில் ஓர் தீவட்டியுடன் வருவதைக் கவனித்து, வாளை உருவி) யார் அங்கே? ஆ பீம்சிங்! நமது இராஜகுமாரனும், அரசியும், என்ன நிலையிலிருக்கின் றூர்கள்.

பீம்சி. மகாராஜ்! நமது கோட்டை முழுவதையும் தோடர்மால் வசப்படுத்தி விட்டான். எங்கும் பலமான காவல். அவன் இட்டதே சட்டம். தங்கள் இருப்பிடத்தைக் கூறுப வருக்கு வேண்டிய பொருள் கொடுப்பதாகவும் விளம்பரம் செய்திருக்கின்றூன். நமது குடிஜனங்களும் தங்கள் பிரிவால் மனம் குழம்பி நிற்கின்றனர்.

இரகு. ஆ! அப்படியா!...........தோடர்மால்! குலத்தைக்கெடுக்க வந்த கோடாலிக் காம்பே! சந்திக்கின்றேன் உன்னை... பீம்சிங்! குழந்தை ஆஜீத்சிங்கைப் பற்றி ஏதாவது சாமா சாரம் கிடைத்ததா.

பீம்சி. இராணி சீதா தேவியார் தங்கள் பிரிவினுலும், குழந்தை யின் தற்போதைய நிலையினுலும் மனம் உடைந்திருக்கிறூர் களாம்.

இரகு. ஏகலிங்கா! ஏனே என்னை இவ்விதம் சோதிக்கின்றீர். பீம் சிங்! என் குமாரனுக்கு என்ன நேர்ந்தது?

பீம்சி. ஜன்னியினுல் மிகவும் கஷ்டப்படுவதாக அறிந்தேன்.

இரகு. ஆ! புத்திரனைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை அதிகரிக் கின்றது. என் செய்வேன் ஆஜீத்! ஆஜீத்! குமாரா!— நீ இம் மண்ணுலகைவிட்டுப் பிரியுமுன் நான் உன்னைக் காணவேண்டும். பிரதாப்! ஜாக்கிரதையாக இருங்கள். நான் சென்று வருகின்றேன்.

பீம்சி. தலைவா! தாங்கள் அங்கு சென்றால் நிச்சயமாகத் தங்களைக் கைது செய்வார்கள். பிறகு தங்களைப் பிரிந்த நாங்கள் துயரத்திற்குள்ளாக வேண்டும்!

இரகு. என்னைக் காப்பாற்றிக் கொள்ள எனக்குத் தெரியும். கவலை வேண்டாம். பிரதாப்! நான் வரும்வரை நீயே இவர்களுக்குத் தலைவன். இது எனது ஆணை. (பிரதாப் வணங்குகின்றான்)

பிரதா. தடை யொன்றும் சொல்ல நான் விரும்பவில்லை. இன்னும் மூன்று தினங்களுக்குள், தங்களை யான் இங்கு சந்திக்க உத்தரவு வேண்டுகிறேன்.

இரகு. அப்படியே சந்திக்கிறேன். இல்லையேல் இரகுபதிசிங் வீர சுவர்க்க மடைவான். அவன் மனைவி, தீயில் பாய்வாள். குமாரன் பவானிமாதாவை அடைவான்! இங்கு கூடியிருக்கும், சிறந்த வீர புருஷர்கள், கம்பீர கர்ஜனையுடன் சத்ருக்களின் படையிலே பாய்ந்து, அவர்களை சம்ஹாரம் செய்து, ஜன்ம பூமியைக் காப்பார்கள்—இல்லையேல் அமர்க்களத்திலே ஆவி நீக்கி, விண்ணுலகம் வருவார்கள். ஜய் பவானிமாதா! (ஆத்திரத்துடன் ஓடி மறைகின்றான். பிரதாபனும், பீம்சிங்கும் வருத்தத்துடன் வணங்கிகிறார்கள்.)

பீம்சி. தலைவ! நமது இராணாவை........

பிரதா. ஆம்—அவர் அறியா வண்ணம் பின்பற்றி ஒரு தீங்கும் வாராமல் அவரைக் காத்தல் வேண்டும். (ஜயசிங் "மகாதேவா" எனக் கூறியபடியே பிரவேசித்து வணங்குகின்றான்.) ஜயசிங்!

ஜயசி. எதற்கும் அடியேன் தயார்!

பீம்சி. பிரதாப் ! எனக்கு உதவியாக, ஜயசிங்கை அழைத்துச் செல்ல அனுமதி வேண்டுகின்றேன்.

பிரதா. அவ்விதமே ஆகட்டும். செல்லுங்கள் இராணாவைக் காருங்கள். எதிரியின் செயல்களை அவ்வப்போது கூற தக்க ஏற்பாடு செய்யுங்கள்.

பீம்சி. உத்திரவு ! ஜயசிங் ! புறப்படு.

ஜயசி. மகாதேவா ! ஓர் விண்ணப்பம். போர்க்கோலத்துடன் செல்லுவதைக்காட்டிலும் மாறுவேஷத்துடன்........

பீம்சி. உன் எண்ணம் அறிந்தேன். எவ்விதம் சொல்லலாம்.

ஜயசி. மகாதேவா ! (யோசித்து) சரி தாங்கள் ஓர் போதகுரு. அடியேன் தங்கள்........தங்கள்........ அட மகாதேவா மறந்துபோனேன்........

பீம்சி. மூட சிஷ்யன் !

ஜயசி. ஆம்........மறந்துபோனேன் முன் பின் செத்திருந்தால் அல்லவா சுடுகாடு தெரியும்........நான் மூட சிஷ்யன் தாங்கள் ஆம் தன்னையே மறந்த போதைகுரு. சபாஷ் ஹா, ஹா, ஹா !........ சரி புறப்படுங்கள் மகாதேவா........

பீம்சி. தலைவ. வருகின்றேன்.

பிரத. ஜாக்கிரதையாகச் செல்லுங்கள். (இருவரும் வணங்கிச் செல்லுகிறார்கள்)...ஆ அதோ கதிரவன் உதயமாகின்றான். (கைகூப்பி வணங்கி நமஸ்கரிக்கின்றான்)

[ நான்காம் களம் முடிகிறது. ]

## களம் 5.

இடம் :— இரகுபதிசிங்கின் கோட்டைவாசல்.

காலம் :— சூரிய அஸ்தமன சமயம்.

நடர் :— அப்துல் காபர்கான், இராஜாதோடர்மால், சப்க்டஜின், ஜயசந்திரன், இரகுபதிசிங். பீம்சிங், ஜயசிங்.

[ கோட்டை வாசலின்மேல், அக்பரின் பிறைக் கொடி பறக்கின்றது. வாசலில் அப்துல் காபர்கான் காவல் புரிகின்றான். சிறிது நேரத்திற்குப் பிறகு சபக்டஜின், ஜயசந்திரன் தொடர, இராஜாதோடர் மால் பிரவேசிக்கின்றான். ]

அப்து. மை ருஸ்தும். ஸலாம், ஸலாம், ஸலாம் !

தோட. ஸலாம் ! அப்துல் காபர்கான் ! பாரா உஷார் ! மாலை நேரமாகி விட்டது.

அப்து. அச்சா ! பகதூர்.

தோட. இரகுபதிசிங்கின் குமாரன் என்ன நிலையில் இருக்கின்றான் தெரியுமா ?

அப்து. ஜன்னியினால் பிதற்றுகின்றாராம். பிழைப்பது கஷ்டம் ! பாவம். குழந்தையின் தாய் நிர்க்கதியாய்த் துக்கப் படுகின்றார்களாம்.

தோட. அதற்கு நாமென்ன செய்யலாம். அவரவர் விதியின் படியே யாவும் நடக்கும். நமது அக்பர் சக்ரவர்த்தியை

விரோதித்துக் கொண்டர்கள் கதி இப்படித்தான் ஆகும்.... நேரமாகின்றது. நான் கோட்டையைச் சுற்றிப் பார்த்து விட்டுச் சீக்கிரமே வருகின்றேன். வரும்வரை ஒருவரையும் உள்ளே என் அநுமதிச் சீட்டு இல்லாமல் விட வேண்டாம்.

[ சபக்டஜின், ஜயசந்திரன் தொடர, தோடர்மால் செல்ல, அப்துல் அவர்களை வணங்கிப் பின்னற் காவல் புரிகிறான். ]

அப். வாழ்வும் தாழ்வும், வினைக்குத் தக்கபடி அநுபவிக்கின்றார்கள் உலக மாந்தர்கள். நேற்றைக் காலைவரை இக் கோட்டை வாசலில் இராஜபுத்திரத் தலைவரான இராணு இரகுபதிசிங்கின் அன்பான கொடி பறந்து கொண்டு இருந்தது. இன்றைய தினம் நமது அக்பர் பாதுஷாவின் பிறைக் கொடி அழகுடன் அசைந்து ஆடுகின்றது. நமது அரசர் இதைக் கண்டால் அவர் மனம் பூரிக்கும்....ஆனால், இரகுபதிசிங் கண்டால் அவர் மனம் பதறும், உள்ளம் துடிக்கும்.... என்னே ஆண்டவனின் செய்கை! உலகில் ஒருவருக்குத் துன்பமளித்து அதன் மூலமாக மற்றொருவருக்கு இன்பமளிக்கின்றார். பரம பிதாவாகிய அவருக்கு இதனால் என்ன சந்தோஷமுண்டாகக்கூடும். ஆ! அவரது உண்மையை யார் கண்டார்கள். அல்லாஹு ஏழைகளாகிய எங்களைக் கண்பாரும். பாபம் செய்யாதிருக்குமாறு எங்களைக் காரும். சத்யமும், சாந்தமும், உண்மையும், உயர்வும், என்றும் எங்களிடம் உண்டாக அருளுடன் கிருபை புரியும் ( ஆண்டவனைத் தொழுது எழுந்திருக்கிறான். ) ஹா! யார் அங்கு? மெல்ல மெல்ல ஒளிந்து வருகின்றான். ( வாளை உருவுகிறான். இரகுபதிசிங் ஓர் எளிய வீரனைப்போல் மாறி, வருத்தத்துடன் பிரவேசிக்கின்றான் ) யாரது? ........ என்ன கேட்பதற்குப் பதில் கூறாமல் நிற்கின்றாய்?

இரகு. மாசற்ற வீரனே ! இக் கோட்டைக்குள் துக்க சாகரத்தில் வீழ்ந்திருக்கும் இரண்டு உயிர்கள், என் வரவை வேண்டிய தால் நான் வந்தேன். உள்ளே செல்ல உத்தரவு வேண்டு கின்றேன்.

அப்து. நன்று. எங்கள் ராணுவத் தலைவரின் அனுமதிச்சீட்டு தங்களிடமிருக்கின்றதா ?

இரகு. இல்லை.

அப்து. இல்லையா ! ஐயோ பாபம். தயை செய்து சீக்கிரமே இவ் விடத்தைவிட்டு உடனே செல்லும்.

இரகு. கருணை வள்ளலே ! கிருபை வேண்டும்.

அப்து. எனக்கு அதிகாரமில்லை. எனவே தாங்கள் மன்றாடுவதில் பயனில்லை. நகரும்.

இரகு. (சில ஆபரணங்களை அவனிடம் காட்டி) நண்பரே ! விலை யுயர்ந்த இந்த வைரங்களையும், நல் முத்துக்களையும் பாருங் கள். இவைகளைப் பரிசாக எடுத்துக்கொண்டு என்னை உள்ளே விடுங்கள்.

அப்து. சீ ! இச் செய்கை உமது பெருமையைக் குறைத்து விட்டது. உண்ட உப்பிற்கு இரண்டகம் நினைக்கும் பாபி நானல்ல ! ஏழையாயினும் நேர்மை சிறிதும் நான் தவறேன் என் மன உறுதியைக் கலைக்க உம்மாலாகாது. விலகும்.

இரகு. ஆஹா ! இந்த உத்தம வீரனை நாம் எப்படி வசப்படுத்து வது. ஹே பவானிமாதா ! ஏகலிங்கா.... தூய வீரனே! தமக்கு மனைவி ஒருவள் உண்டல்லாவா ?

அப்து. ஆம். அதற்கென்ன !

இரகு. குழந்தைகள்!

அப்து. ஓர் அழகிய பாலன் உண்டு.

இரகு. அவர்கள் எங்கு இருக்கிறார்கள்?

அப்து. டெல்லியில் அக்பர் மகா சக்ரவர்த்தியின் ஆளுகையின் கீழ்.

இரகு. பொருமையுள்ள வீரனே! உமது மனைவியையும், குமாரனையும், தங்கள் உயிருக்குச் சமமாக மதிக்கின்றீர்கள் அல்லவா?

அப்து ஆம்! எதற்காகத் தாம் இவ்வித மெல்லாம் கேட்கின்றீர்கள்? ஆ! ஆண்டவனே! இது என்ன? என் மனம் பீதியடைகின்றது.

இரகு. சத்யமூர்த்தியே! தங்கள் குடும்பத்தார் மிகவும் அபாயகாமான நிலையிலிருப்பதாக நினைத்துக் கொள்ளுங்கள் அதுபோது தங்களுடைய மனநிலை எவ்வித மிருக்கும்.

அப்து. ஐயா! அவர்களைக் காண உடனே ஓடுவேன்.

இரகு. அவவிதம் ஓடும் தங்களை, தங்கள் வீட்டிற்குள் செல்லலாகாதென்று அதிகார வர்க்கத்தார் தடை செய்தால்....?

அப்து. மனம் உடைந்து மாள்வேன். ஐயா தாங்கள் யார்? என் குடும்பத்தாருக்கு என்ன நேர்ந்தது? தயை செய்து சீக்கிரமே தெரிவியுங்கள். அல்லாஹு!

இரகு. உத்தம வீரரே! ஒருவிதமான குறையும் உமக்கு வாராது உண்மையில் அந் நிலை என் குடும்பத்துக்கு ஏற்பட்டதனலேயே, மனம் வாடி வந்திருக்கிறேன். தயை செய்து மேன்மையுள்ள க்ஷத்ரிய வம்சத்தில் தோன்றிய, இந்த இரகுபதிசிங்கை உள்ளே அனுமதிக்க வேண்டுகின்றேன்.

அப்து. ஆ! ஆ! இரகுபதிசிங்கா! நினைத்தேன். வீரரே! எமது அரசனின் ஆணைப்படி நான் தங்களைக் கைது செய்கின்றேன். தடை செய்தால் நம் இருவரில் ஒருவர் மடிய வேண்டும். (விலங்கை எடுக்கின்றான்.)

இரகு. சாந்த சுவரூபியே! தமது அரசர் கட்டளைப்படி நடக்க நான் சித்தமாக இருக்கின்றேன். கவலை வேண்டாம். ஆனால் ஒரே ஒரு வேண்டுகோள். என் அருமைக் குமாரன் அஜீத்சிங், எனது மாளிகையில் யமனுடன் வாதாடிக் கொண்டிருக்கின்றான். என் மனைவி உதவியற்றவளாய்ப் புத்திர சோகத்தால் ஏங்குகின்றாள். கருணை வள்ளலே! அவர்களைக் கண்டு, ஆம் கடைசியாகக் கண்டு, இவ்வுடலை உயிருடன் சத்தியமாகத் தங்களிடம் சேர்ப்பிக்கின்றேன்.

அப்து. சீ! என்னே மனிதனின் வாழ்க்கை! ஆ பர்வர்திகார்! இம் மகா வீரனின் வார்த்தைகள் என்னை அடிமை கொண்டனவே. என் செய்வேன். ஐயா! தங்கள் வார்த்தைகளை நான் நம்ப முடியாது. மன்னிக்கவேண்டும்.

இரகு. ஹே உத்தம புருஷனே! சந்தேகப்படவேண்டாம். சீக்கிரம் என்னை உள்ளே அனுமதியும். பின்னர் தங்கள் மனம் களிக்க, ஒரு நாழிகைக்குள், உத்தம க்ஷத்ரிய வீரனை இந்த இராணு ரகுபதிசிங் தம்மிடம் கைதியாக நிற்பான். இது சத்தியம்.

அப்து. இந்த தரும சங்கடத்திற்கு என்ன செய்வது. ஓர்புறம் அரசன் ஆணை. மற்றொருபுறம் ஓர் சுத்த வீரனின் பரிதாப நிலைமை. இவரை உள்ளே விடுத்தால் இராஜத் துரோகம். விடாமல் கைதி செய்தால், இவ் வீரனின் சோகம் நம் துயரத்தை அதிகமாக்கும். ஆம்! இன்னாம் ஆண்டவனின் கோபத்திற்கும் நாம் உள்ளாக வேண்டும். எது வரினும் வரட்டும். இரக்கமற்ற பாவி நானல்ல. பிரிய

சகோதரரே! தமது வேண்டுகோளை மறுக்க என்னால் முடியவில்லை. உட் சென்று, மனைவியையும், குமாரனை யும் பார்த்துவிட்டுச் சீக்கிரமே திரும்புங்கள்.

இரகு. ஆ! இத்தகைய உத்தமர்களுக்காகவே உலகில் மழை பொழிகின்றது. பிற உயிரைத் தன் உயிர்போல் நினைக் கும் பெரும் தியாகியே! ஆண்டவன் தம்மைக் காப்பானாக. (கண்ணீர் சொரிய வணங்கி உள்ளே செல்லுகின்றான்.)

அப்து. நான் செய்த பெரும் பிழையை மன்னிக்க வேண்டும்.

[கீழே அமர்ந்து ஆண்டவனைப் புகழ்ந்து பாடுகின்றான். பாட்டு முடிந்ததும், சந்யாசிகளைப் போல் மாறுவேடமணிந்து வந்த பீம்சிங்கும் ஜயசிங்கும், பிரவேசிக்கிறார்கள்.]

ஜயசி. மகாதேவா! சுவாமிகாள் உள்ளே நுழையுங்கள்.

பீம்சி. அப்படியே (காவலனை நோக்கி) ஐயா சற்று எட்டிநில்லுங்கள்.

அப்து. சாதுக்களே! உட்செல்ல அநுமதிச்சீட்டு வேண்டும்.

ஜயசி. ஐயா! சீட்டு வாங்கும் சாதுக்கள் நாங்கள் அல்ல. வழி விடுங்கள். போதகுருவே! புகுந்து செல்லுங்கள். (இருவரும் நுழைய எத்தனித்தல்.)

அப்து. (வாளை உருவி) ஜாவ்.

ஜயசி. அட மகாதேவா! ஓ சாயபு. கோபம் நை. கத்தியை உறையில் போட்டு விடுங்கள். நமக்கும் அதற்கும் வெகு தூரம்.

அப்து. அச்சா.......செல்லுங்கள்.

பீம்சி. ஜவான் ! கொஞ்சம் தருமமாவது செய்யமாட்டீரா.

அப்து. (தன் பையிலிருந்த ஓர் வெள்ளி நாணயத்தை சந்தோஷத்துடன் எடுத்து) ஐயா ! இதைப்பெற்றுக்கொண்டு, சீக்கிரமே இவ்விடம் விட்டு நகருங்கள்.

ஜயசி. ஆண்டவன் உம்மைக்காப்பார்........யோகீஸ்வரரே! மெல்ல கவனித்துவாருங்கள். சூரியபகவான் அஸ்தமித்து விட்டார்.

பீம்சி. சிஷ்யா ! வேறுவழியில்லையா.

ஜயசி. இருந்தால் நல்லதான்........வாருங்கள். அதோதெரியும் அப் பாழடைந்த மண்டபத்தில் தங்கலாம். (இருவரும் இரகசியமாகப் பேசிக்கொண்டே மறைகிறார்கள்.)

[ ஐந்தாம் களம் முடிகிறது ]

## களம் 6.

இடம் :— இரகுபதிசிங்கின் அந்தப்புறம்.

காலம் :— முன்னிரவு

நடர் :— சீதாதேவி, அஜீத்சிங், இரகுபதிசிங்.

[ ஒரு கட்டிலில் அஜீத்சிங் நோயினுல் வருந்திய வண்ணம் படுத்திருக்கின்றுன். அருகில் சீதா வருத்தத்துடன் அமர்ந்திருக்கிருள். சிறு மேஜை ஒன்றில் சில மருந்துப் பாத்திரங்கள் காணப் படுகின்றன. ]

அஜீத். அம்மா !

சீதா. கண்ணே ! இப்பொழுது உடம்பு எப்படியிருக்கின்றது.

அஜீத். கொஞ்சம் சௌகரியமாய் இருக்கிறதம்மா. அப்பா வந்தவுடன் சொல்லுகிறீர்களா.

சீதா. ஆகட்டுமெப்பா. தூங்கு.

அஜீத். எப்பொழுது பார்த்தாலும், தாங்கள் என்னைக் காத்துக் கொண்டே இருக்கின்றீர்களே. அதுபோல நானும் தங்களைப் பார்த்துக்கொண்டே இருக்க அனுமதிக்க மாட்டீர்களா.

சீதா. ஆ பவானி! ........ ஆஜித்! நீ தூங்கு. கண்ணல்ல, பிறகு பேசலாம்.

அஜீத். நம்ம பிரதாபசிங் எப்பம்மா வருவார்.

சீதா. சீக்கிரமே வருவார். ஆள் அனுப்பியிருக்கின்றேன்.

அஜீத். நிஜமா வருவார்களா.

சீதா. ஆம்.

அஜீத். சந்தோஷம்........(எழுந்து அமர்ந்து தன் வலது பக்கத்தை சிறிது நேரம் உற்று நோக்கி விழித்துக்கொண்டே) அது என்னம்மா.

சீதா. (பயத்துடன்) என்னப்பா சொல்லுகிறாய்! கண்ணே.

அஜீத். என் வலது கைப் பக்கத்தில் பாருங்கள்.

சீதா. வலது பக்கத்தில்! ஹா தெய்வமே! கண்ணே எனக்கு ஒன்றும் தெரியவில்லையே.

அஜீத். ஆ....(கைக்கூப்பி சிரித்த வண்ணம்) அன்னை பவானி. ஆம் தாயே அடி வணங்கினேன்........ (தலை சாய்ந்தபடியே வீழ்கின்றான்.)

சீதா. ........ஹா. அஜீத். அஜீத். என்னைவிட்டுத் தனியே பவானி தேவியிடம் சென்றுவிடாதே (முத்தமளித்து) அஜீத்! என் கண்ணே அஜீத்! ஐயோ! தன் நினைவை மீண்டும் இழந்தனன் மாதா! போதும் நின் சோதனை. வீர புருஷனைப் பிரிந்தேன். எனது தன்மைக்குரிய சகல இராஜ போகங்களையும் பறிகொடுத்தேன். இனி எனக்கு என்ன வாழ்வு இருக்கின்றது எதை நினைத்தாலும், எங்கு பார்த்தாலும் துன்பத்தையே காண்கின்றேன். ஏகலிங்கா! நின் பாதமே கதி யென நம்பிய என் மீது கருணையில்லையா. கஷ்டங்களையே அனுபவித்ததனால் என் நெஞ்சம் புண்ணாகிவிட்டது. போதும் இவ் வாழ்க்கை.

[ வருத்தத்துடன் கட்டிலின் ஒரு பக்கத்தில் சாய்கின்ருள். சிறிது நேரத்திற்குப் பின் இரகுபதி சிங் மெல்லப் பிரவேசிக்கின்ருன். ]

இரகு. அஜீத் ! (கட்டிலின் பக்கம் பாய்ந்து குமாரனை முத்தமளிக்கின்ருன். ]

சீதா. ஆ ! நாதா ! நாதா ! தங்களைக் காணக்கொடுத்து வைத்தேன்.

இரகு. கண்ணே சீதா ! எல்லாம் ஏகலிங்கன் செயல். குமாரா ! என்னைப் பார். இதோ பார். இதென்ன பதிலைக் காணேம். சீதா ! வைத்தியர் வந்தாரா ?

சீதா. ஆம் வந்தார். வந்து என்ன பயன். இப்பொழுதோ, இன்னும் சற்று நேரமோ எனக்கூறினர்.

அஜீத். ஆ ! பவானிமாதா, நமஸ்காரம், பொறுங்கள், வருகின்றேன்

இரகு. ஆ ! அஜீத் ! அன்னை அழைக்கின்ருளா ? செல். நானும் சீக்கிரமே வருகின்றேன்.

அஜீத். அப்பா ! வந்தீர்களா. (கை கூப்புகின்ருன்.) அருகினில் வாருங்கள் (கட்டிக்கொண்டு) அப்பா ! நான் தான் சௌக்யமாக இருக்கின்றேனே. நீங்கள் ஏன் வருந்துகிறீர்கள்............பாவம். அம்மா என்பொருட்டு மிகவும் கஷ்டப்படுகிருர்கள்....அவர்களை நன்ருகக் கவனியுங்கள்....நான் வருகின்றேன்....ஆ. ஆ. அதோ வெளிச்சம். பிரதாப் என் அப்பாவை கா....( கீழே சாய்கின்ருன்.)

இரகு. ஆ பவானி ! பவானி, பவானி. மனம் தாளவில்லை அஜீத் ! குமாரா அஜீத் ! ( கண் திறக்கின்ருன் ) ஆ ! என்ன வாஞ்சை. கண்ணே சீதா ! நமக்குப் பெரும் சோதனை

காலம். குமாரனுக்கு வேண்டிய உதவிகளைச் செய். பவானிமாதா விட்டவழி விடட்டும். நான் வருகின்றேன் நேரமாகின்றது.

சீதா. எங்களை இந்த நிலையில்விட்டு எங்குசெல்ல உத்தேசித்திருக்கிறீர்கள்.

இரகு. கருணையினால் இங்கு என்னை அனுப்பிய வரும், என்னைக் கைது செய்வதற்காக அரண்மனை வாசலில் காத்திருப்பவருமான, மாசற்ற வீரன், பொதுநலங் கருதும் மகாத்மா அப்துல் காபர்கானிடம் செல்லுகின்றேன்.

சீதா. சற்றுமுன் நம் இருவரையும் ஒன்று சேர்த்த தெய்வம், உடனே பிரிக்கவும் முன் வந்ததோ. ஆ நாதா ! தாங்கள் அவரிடம் சென்றால் தங்கள் நிலை என்ன ஆகும். தங்களைத் தலைவாகக் கொண்ட நமது சைன்யங்களின் கதி என்ன ஆகும்.

இரகு. சீதா ! என்னைப்பற்றி நான் சிறிதளவும் வருந்தவில்லை தேகம் அநித்தியம். மரணம் நிச்சயம்—கடவுள், மன்னன் தாய் நாடு, இவைகளுக்குப் பணி செய்வதில் மிக்க உறுதியுள்ளவனான உத்தம வீரன், எனது மனங் கவர்ந்த தீரன், பிரதாபஸிம்ஹன் எனக்குப் பிறகு தலைமை கொள்வான். ஆகவே நாட்டைப்பற்றியும் கவலையில்லை.

சீதா. நாதா ! உண்மை அறிந்தேன். இனி நம் குமாரன் அஜீத் சிங்குக்கு ஆதரவு யாரோ ?

இரகு. ஏகலிங்கன் ! பெண்ணே ! ஆண்டவன் விட்டவழி விடட்டும். நான் சென்று வருகிறேன்.

சீதா. நாதா ! அடியாளின் வார்த்தையைக் கேட்கலாகாதா ?

இரகு. சீதா நேரமாகின்றது. சீக்கிரமாக உன் மனத்தில் இருப்பவைகளைச் சொல்.

சீதா. மன்னிக்கவேண்டும். ஒருவருமறியா வண்ணம், இக் கோட்டையை விட்டு இரகசியமாகத் தப்பிச் செல்ல, தங்களை வேண்டுகின்றேன்.

இரகு. ஆ! குலநாசனியே! என்ன தெரிவித்தனை! உண்மை இராஜபுத்திரன் தன் வார்த்தையை உயிர் உள்ளளவும் காப்பான் என்பதனை மறந்தனையோ. இந்த அற்ப உயிரைக் காப்பதன் பொருட்டு, நான் தப்பி ஓடுவேனேயாகில் யாருக்கு அவமானம். குலப்பெருமையையும், இராஜபுத்திரன் என்னும் கௌரவத்தையும் இந்த இரகுபதி சிங் இருக்கும்வரை காப்பான் என்பதை நீ அறியவில்லையா? சீதா! இராஜபுத்திரப் பெண்மணிகளுக்குத் தகாததும், புகழைப் போக்கி அபகீர்த்தியை அளிப்பதுமான, இந்த வீண் பிரேமை உனக்கு இது சமயம் எப்படி வந்தது? பெண்ணே! கோழைத் தனத்திற்காளாகாதே. இது உன் போன்ற வீரபத்தினிகளுக்கு ஏற்றதன்று.

சீதா. பேதமையினாலும், வாத்சல்யத்தினாலும் குலப் பெருமையை மறந்துபேசிய என்னை மன்னிக்கவேண்டும். ஆயினும், காவலனிடம் தாம் செல்ல உறுதிகொண்டதை நினைக்கும்பொழுது என் அறிவு கலங்குகின்றது. மனம் தளர்கின்றது. என்னால் நிற்கவும் முடியவில்லை. (கீழ் அமர்ந்து.) இந்த விதிக்கு என்ன செய்வேன்.

இரகு. பிறந்தவர் இறக்கவேண்டும். இறந்தவர் பிறக்கவேண்டும் இதை எவரும் தடுக்க முடியாது. எனவே விலக்க முடியாத விதிக்கு நீ சோக முறுவது நியாயமல்ல. உனக்கு நான் அதிகம் சொல்லத்தேவையில்லை. ஆ

குமாரா ! உன்னைக் காண வந்தேன். கண்டேன். இதோ நான் உனக்கு எனது முடிவான முத்தம் அளிக்கின்றேன். (முத்தங்கள் பல அளித்து, மனம் உடைகின்றான்.) சீதா ! அஜீத் ! செல்கின்றேன்.

சீதா. குமாரா ! இதுவோ உன் தலைவிதி, நாதா ! நில்லுங்கள். தங்கள் முன்பாக, எரியும் நெருப்பில் என் ஆவியை விடுகின்றேன். பின்னர் தங்களிஷ்டபடி....

இரகு. சீதா ! அதற்கு நேரமில்லை. என் காரியம் முடிந்ததை நன்றாக அறிந்தபின், நீ சதி போகலாம் நான் வருகின்றேன். அஜீத் வருகின்றேன். (மெல்லச் சென்று திடீரென ஓடி வந்து அஜீத்சிங்கை அணைத்து முத்தமளிக்கின்றான்.) குழந்தாய் ! நான் உன்னைப் பிரிகின்றேன். பரிதாபமான இந் நிலையில் உன்னைப் பிரியும் என்னை, ஈசன் மன்னிப்பாரா ! இல்லை, இல்லை. இது போது நான் வேறு என்ன செய்ய முடியும். குலப்பெருமை, சத்தியம். ஆம் ! இவைகளின் பொருட்டு நான் உயிர் விடவேண்டும். உன்தாய் அக்னிப்பிரவேச மாகவேண்டும். குமாரா!....ஆ தெய்வமே! இதென்ன இவன் உடல் குளிர்ந்திருக்கின்றது.

சீதா. என்ன ! (குழந்தையை அணைத்தல்)

இரகு. அஜீத் ! அஜீத் ! நில் ! நில் ! நானும் இதோ உன்னை அடைகின்றேன். (மனமுடைந்து, கண்ணீர் சொரிய ஓடுகின்றான்.)

சீதா. ஆ நாதா ! நாதா ! குமாரா ! அஜீத், அஜீத் (அவன் மீது விழுந்து தன் நினைவை இழக்கின்றாள். அஜீத் மெல்லப் புரண்டு, தன் தாயின் தலையைத் தடவுகின்றான்.)

[ ஆறாம் களம் முடிகிறது ]

## களம் 7.

இடம் :— இரகுபதிசிங்கின் கோட்டைவாசல்.

காலம் :— முன்னிரவு.

நடர் :— அப்துல் காபர்கான், இரகுபதிசிங், இராஜா தோடர்மால், சபக்டஜின், ஜயசந்திரன், பீம் சிங், ஜயசிங்.

[ கோட்டையின் உட்புறத்தை அடிக்கடி நோக்கிய வண்ணம், காபர்கான், காவல் புரிகிறான்.]

அப்து. இந்நேரம் தன் மனைவியையும், குமாரனையும் கண்டிருப்பார். பிரிந்து கூடியதனால், அவர்களிடையே சந்தோஷம் தாண்டவமாடும்—அந்தோ ! என்ன கஷ்டம் ! தமது கணவன் கைதியாகக் காபர்கானிடம் செல்லவேண்டும் என்பதை அவர் உத்தம மனைவி அறிந்தால், அந்தோ! அச் சகோதரியின் உள்ளம் கொதிக்குமே. என் செய்வேன். ஆ இதென்ன ! என் எண்ணமெல்லாம் மாறுகின்றது. நான் அக்பர் பாதுஷாவின் சேவகன் அல்லவா ; அவருக்குத் துரோகம் நினைப்பது பெரும் பாதகமல்லவா ; எது வரினும் வரட்டும். என் கடமையை நான் மறக்க முடியாது. ( இரகுபதிசிங் வருத்தத்துடன் வெளி வருகின்றான். )

இரகு. தயாநிதியே ! இதோ சித்தமாக வந்து விட்டேன். இனித் தாங்கள் என்னைக் கைதியாக்கிச் செல்லலாம்.

அப்து. மகா வீரரே! நீரே சத்யவான். உயிரையும் கருதாது கொடுத்த வாக்கைக் காப்பாற்றினீர்கள்.

இரகு. சத்ருக்களையும், மித்ருக்களையும் சமமாகக் கருதும் சாந்தனே! உண்மை இராஜபுத்திரன் தன் வாக்கை என்றும் காப்பான் என்பதை இப்பொழுது அறிந்தீர்கள் அல்லவா. நேரமாகியதற்கு என்னை மன்னிக்க வேண்டுகின்றேன். (கரங்களை நீட்டி) சீக்கிரமே எனக்கு விலங்கிடுங்கள்.

அப்து. ஆ தெய்வமே! இவ்வீரனின் தோற்றமும், உண்மையான மாற்றமும் என் ஐம்புலன்களையும் அடிமை கொண்டனவே இவரைக் கைது செய்யாமல் விடுத்தால் ராஜத் துரோகத்திற்காக நாம் உயிர் இழக்க நேரிடும். கைது செய்தால் ராஜ சேவைக்காகப் பெரும்புகழ் அடைய நேரிடும். ஆனால், பரமண்டலத்தில், ஆண்டவனால் 'இரக்க மற்ற பாவி' எனத் தள்ளப்படுவோம்........

இரகு. வீரரே! தமது கடமையைச் செய்ய யோசனை எதற்கு? எனது மனைவி, மைந்தன், இவர்களிடம், நான் என் கடைசி வார்த்தைகளைக் கூறியே வந்தனன். எனவே, சீக்கிரமே என்னைக் கைதுசெய்து இப்பொய்யாகிய உடலில் ஊசலாடிக்கொண்டிருக்கும் ஆவியை நீக்க, முன் வாரும்.

அப்து. அல்லாவே! என் அறிவு குழம்புகின்றது. மனத்தையும், மதியையும் கடவுளுக்கு அர்ப்பணம் செய்த மகாவீரனே. தங்களது உத்தமமான செய்கை என்னைத் தங்கள் அடிமையாக்கி விட்டது. சத்தியமும், சாந்தமும், அடக்கமும், தைரியமும் நிறைந்த தங்களை இன்றே கண்டேன். மாசற்ற வள்ளலே! தம்மைக் கைதியாக்கி நான் புகழ் பெற விரும்பவில்லை. எனக்கு நன் மதிப்பும், கௌரவமும்

வேண்டாம். எனது அரசர் என்னைக் கொன்றாலும் சரி, அல்லது பெரும் பதவியை அளித்தாலும் சரி, உம்மைக் கைதி செய்ய சிறிதும் விரும்பவில்லை........எனவே தயைசெய்து சீக்கிரமே ஓடி மறையுங்கள். அப்பொழுதா என் மனம் ஆறுதலடையும்.

இரகு. உத்தமரே! என்மீது இரக்கம் கொண்டதற்கு, நான் எக்காலத்திலும் கடமைப்பட்டுள்ளேன். ஆயினும்! நீர் செய்வது ராஜத்துரோகமாகும் என்பதைப் பணிவுடன் கூறுகின்றேன்.

அப்து. புண்ணிய புருஷனே! அந்நீதி நான் அறிவேன். நான் தங்களை வேதனைக்குள்ளாக்க விரும்பவில்லை. உயிரை வெறுத்து வந்த தங்களைக் கைதியாக்கிக் கொல்வதால் அப் பாபம் யாரைச்சேரும். என்னையே சாரும். மறையும் உடனே. ஆண்டவனிடம் நான் நியாயம் சொல்லிக் கொள்ளுகின்றேன்.

இரகு. (காபர்கானைத் தழுவி வணங்கி) உத்தமனே! என் உயிர் கொடுத்த ஏந்தலே! உமது செய்கை உலகுள்ளளவும் என் குடும்பத்தார்களால் போற்றப்படும். நான் வருகின்றேன். இறைவன் திருவுளமிருக்குமாயின் இந்த இராணு ரகுபதிசிங், தன்னலமற்ற அப்துல் காபர்கானின் பெரும் சேவையை, உலக மாந்தர்கள் போற்றுமாறு செய்வான். (கானின் கரங்களைக் கண்ணில் ஒற்றிக்கொண்டு வணங்கி மறைகின்றான்)

அப்து. என் பாரம் குறைந்தது. ஓர் உத்தம இந்து சகோதரர், ஆண்டவன் கருணையினால் உயிர் பிழைத்தார். பரம் பொருளே! உம்மைப் போற்றுகின்றேன். அவரைக் காரும் (மாறுவேடமணிந்த பீம்சிங்கும், ஜயசிங்கும் பிரவேசித்தல்.)

ஜயசி. தருமம் தலைகாக்கும். ஞானகுருவே! அதோ வேகமாகச் செல்லும் வீரரிடத்தில் அடியேன் ஏதாகிலும் பெற்றுவர உத்திரவு கிடைக்குமோ.

பீம். சிஷ்யா! அப்பணியில் நாயேன் ஈடுபடுகின்றேன். நீ இங்கிருந்தபடியே வருபவர்கள் எதிரில் நின்று, வணங்கித் தருமம் கேள்.

ஜய. உத்திரவை உள்ளத்தில் கொண்டேன். (பீம்சிங் இராணுவைத் தொடருகிறான். மற்றொரு பக்கத்தில், ஜயசந்திரன், சப்க்டஜின், இருவரும் ஓடிவருவதை ஜயசிங் கவனிக்கின்றான்.) சாயபூ! அதோ வரும் வீரர்கள் அடியேனுக்கு ஏதாவது........

அப்து. ஆ! எனது தலைவர்கள். ஐயா! விலகி நில்லும். (உட்பக்கத்தில் "பிடியுங்கள் விடாதீர்கள்" என்னும் சப்தம் அடிக்கடி உண்டாகிறது.)

ஜயசி. காவலரே! யாரைப்பிடிக்கவேண்டும். (ஜயசந்திரன் முன்னால் பாய்ந்து ஓடி வருகின்றான்ான்—விடாதே, பிடி—விடாதே பிடி' என அடிக்கடி கூவிய வண்ணம், சபக்டஜின் ஜயசந்திரனைப் பின் தொடருகின்றான்.) இதோப் பிடித்துவிட்டேன். (ஜயசந்திரனைப் பிடித்துக் கீழே தள்ளிவிடுகின்றான். இருவரும் தரையில் புரளுகிறார்கள்.)

ஜயச. பரதேசிப்பயலே! விடடா என்னை.

ஜயசி. திருட்டுப்பயலே! விடமாட்டேன் உன்னை.

சபக். ஆண்டிப்பயலே! விடு அவரை. இல்லையேல் உன்னைக் குத்தி விடுவேன்.

ஜயசி. இந்தத் திருடனை, விட்டுவிடவா சொல்லுகிறீர்கள். உத்திரவு. (ஜயசந்திரனை தன் பிடியிலிருந்து விடுவிக்கின்றான்.)

ஜயச. முரட்டுப்பயலே! இந்தா பெற்றுக்கொள் (முதுகில் ஓர் குத்து விடுகின்றான்.)

ஜயசி. ஆ! மகாதேவ! செத்தேன்.

ஜயச. சபக்டஜின் சீக்கிரமாக வா — அவனை எப்படியும் பிடிக்கவேண்டும். (ஓடுகின்றான்.)

ஜயசி. கான்சாஹெப்! யாரைப்பிடிக்க ஓடுகிறார்கள்.

அப்து. ஐயா! சீக்கிரமே இவ்விடத்தைவிட்டு ஓடி விடுங்கள்.

ஜயசி. சாயபு! மன்னிக்கவேண்டும். உண்மையில், ஏதாவது வெகுமதி கிடைக்கும் என நினைத்து முதலில் ஓடிவந்த வரை திருடன் என நினைத்து, பிடித்தேன். பிடித்ததற்கு நல்ல தருமம் கிடைத்தது....ஆ! அதோ யாரோ வேகமாக, கோபமாக வருகிறார்கள். நான் போய் விடுகின்றேன். (செல்லல் **இராஜா தோடர்மால்** கோபத்துடன் பிரவேசிக்கின்றான்.)

**தோ.** கான்சாஹிப்! இப்பொழுது தம்முடன் பேசி மறைந்தது இராணு ரகுபதிசிங் அல்லவா?

அப்து. ஆம்!

**தோ.** ஹா! ஏன் அவரைக் கைது செய்யவில்லை.

அப்து. அவருடைய உத்தமமான செய்கை, என் மனத்தை மயக்கியதால், அவரைக் கைது செய்ய முடியவில்லை. அதனால் அவரை நானே தப்பி மறையும்படி கூறினேன்.

**தோ.** ராஜத்துரோகி! என்ன காரியம் செய்தனை, நமது பாதுஷாவிற்குப் பலவிதத்தும் இடையூறுகள் செய்யும்,

அவனை நீ விடுத்ததினால் உன் தலைக்கே வந்தது ஆபத்து.
(ஜயசந்திரன் இரத்தக் காயங்களுடன் ஓடி வருகின்றான்.)

ஜயச. தலைவரே! இரகுபதிசிங்கை என்னால் எதிர்க்க முடியவில்லை. தப்பிவிட்டான்.

தோ. தப்பி விட்டானா! காபர்கான் உன் செய்கை எவ்வளவு கஷ்டங்களைத் தருகின்றன பார்....முடிந்தது உன் ஆயுள். சபக்டஜின், இத்துரோகியை உடனே கைது செய்து யுத்த சபையின்முன் கொண்டுவாருங்கள்.

[தோடர்மால் செல்ல, சபக்டஜின் காபர்கானைக் கைதியாக்கி அழைத்துச் செல்கிறான். ஜயசிங் மெல்ல வெளி வருகின்றான்.]

ஜயசி. பவானிமாதா! கருணை வேண்டும். சுத்தவீரன். சமரச ஞானி, அப்துல் காபர்கானுக்கு ஒருவிதத் துன்பமும் உண்டாகமல், திருவருள் புரிவாய்............ (பீம்சிங் பிரவேசிக்கின்றான்.)........குருவே!

பீம். (சுற்றிப் பார்த்துவிட்டு) பீம்சிங்! நமது இராணா தப்பித்தார். நீ கோட்டையின் உட்சென்று பைராஹி மடத்தில் தங்கியிரு. காலையில் நான் அங்கு உன்னைச் சந்திக்கின்றேன்.

ஜயசி. உத்திரவு. ஆனால் ஓர் வேண்டுகோள்.

பீம். சீக்கிரம் கேள்.

ஜயசி. உத்திரவு பெறாமல் யுத்தகளம் சென்ற விஷயத்திற்காக என் மனைவி தேவகியிடம்...........

பீம். ஆம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, தக்க, ஏற்பாடுகளும் செய்துவிட்டு—

ஜயசி. ஆம் தங்களைச் சந்திக்கின்றேன். அத்துடன் தாங்கள் மணக்க எண்ணிய, பத்மினி தேவியைப்பற்றியும் விசாரித்து வர உத்திரவு வேண்டுகின்றேன்.

பீம். வேண்டாம்—ஜயசிங்—அவ்வேல் விழியாள், என் வரவை அறிந்தால், என்னை மீண்டும் யுத்தகளம் செல்ல விட மாட்டாள். நாம் வந்திருப்பது இராஜ காரியம்! ஜாக்கிரதை.

ஜயசி. சரி. சென்று வருகின்றேன்....( செல்லல். )

பீம். ஜயசிங், நில் நில். எதற்கும், அவள் மன நிலையை சௌகரியப் பட்டால் அறிந்துவா—

ஜயசி என்னமோ—பார்க்கின்றேன். நாம் வந்திருப்பது இராஜ காரியம் ஜாக்கிரதை. (வணங்கி) மகாதேவா. (கோட்டையின் உட் செல்லுகின்றான்.) பீம்சிங் வெளிப்பக்கம் செல்லுகின்றான்.

[ ஏழாம் களம் முடிகிறது. ]

## களம் 8.

**இடம் :—** இராஜபுதனத்தில் ஓர் தெரு.

**காலம் :—** மாலை.

**நடர் :—** தேவகி, ஜயசிங்,

[ தெருவில் ஜனங்கள் நடமாடிக்கொண்டிருக்கிறார்கள். ஜயசிங் பிரவேசிக்கின்றான். ]

ஜயசி. அவள் வீட்டில் இல்லை—பின் எங்கு சென்றிருப்பாள்-ஆம் என்னைப்போன்றவனை மணம் செய்துகொண்டவர்கள் கதி இப்படிதான் ஆகும்—ஆ கடவுளே! அது யார்—ஆம் அவள்தான்-தேவகிதான்-சந்தேகம் இல்லை. மகாதேவா! (ஆலயத்தினின்றும் பிரசாதங்களுடன் தேவகி பிரவேசிக்கிறாள்.) துன்பம் நிறைந்த இவ்வுலகில் இன்பம் என்ன இருக்கிறது. தோன்றிடில் புகழொடு தோன்றவேண்டும். இல்லையேல், நம்மைப்போல், மாறிவிட வேண்டும்.

தேவ. ஆம் அவர்தான். இதென்ன வேஷமோ தெரியவில்லையே. நம்மைக் கவனியாமலன்றோ இருக்கின்றார். அருகினில் செல்வோம்.

ஜயசி. நம்மை அறிந்து கொண்டாள்—மகாதேவா....

தேவ. ஐயா! தாங்கள்

ஜயசி. ஓர் சந்யாசி. மூன்று காலங்களையும் கூறும் ஓர் ஞானி,

தேவ. குடும்பத்திலிருந்த தாங்கள் ஏன் சந்யாசியாக மாறீ னீர்கள்.—ஆ நாதா ! இது உமக்கழகா.

ஜயசி. ஸ்—தேவகி. நான் உன் கணவன் என்று ஒருவரும் அறியக்கூடாது ஜாக்கிரதை.

தேவ. அறிந்தேன்—பெரியீர் — மனைவியிடம் சொல்லிக்கொள் ளாது குடும்பத்தைவிட்டு நீங்குவது புருஷர்களுக்கு ஞாய மாகுமா ?

ஜயசி. உண்மைச் சேவையின் மூலம் புகழ், கீர்த்தி முதலியன கிட்டுவதாக இருந்தால் மனைவியை புருஷன் பிரியலாம்.

தேவ. உண்மை. ஸ்வாமி ! புருஷனைப்பிரிந்த மனைவி, தன் வயிற்றை வளர்க்க, என்ன செய்வாள்.

ஜயசி. உடலில் வலு இருந்தால், தன் கற்புக் கெடாமல், உத்தமமான பணிகளைச் செய்து அதன் வரும்படியைக் கொண்டு ஜீவிக்கலாம்.

தேவ. ஓகோ அப்படியா ! ஸ்வாமி, உண்மையில் எனக்கு, அந்நிலை ஏற்பட்டதனாலேயே கேட்டேன்.

ஜயசி. கவலைப்படாதே. உன் செய்கையையும், உன் கௌரவமான நடத்தையையும் உன் புருஷன் அறிவான். சீக்கிரமே, புகழுடனும், கீர்த்தியுடனும் அவன் நாடு திரும்புவான்.

தேவ. அதுவே நான் கோருவது. ஞானமூர்த்தியே. அடியே னுடன் என் குடிசைக்கு வரவேண்டும். நான் அங்கு தங்களுக்கு அளிக்க விரும்பும் பாத பூஜையையும் மற்ற மரியாதைகளையும் பெற்றுக்கொள்ளவேண்டும்.

ஜயசி. அப்படியே. தேவகி—ஆ !—( சுற்றிப் பார்த்துவிட்டு. ) நல்ல வேளை ஒருவரும் நம்மைக் கவனிக்கவில்லை. வீட்டிற்குச் சென்றால், இவளிடமிருந்து எப்படித்தப்பிப் பது. அட மகாதேவா ("பக்தியே முக்தி தரும்" என்னும் கருத்தையுடைய பாட்டை பாடிச் செல்லுகிறான். )

[ எட்டாம் களம் முடிகிறது ]

## களம் 9.

இடம் :— பத்மினியின் வீட்டின் ஓர் அறை.

காலம் :— இரவு.

நடர் :— பத்மினி, தேவகி.

[ பத்மினி, வருத்தத்துடன் காணப்படுகிறாள் பின் புறமாக தேவகி பிரவேசித்து அவளைக் கவனிக்கின்றாள். ]

தேவ. பத்மினி !

பத்மி. யாரது........தேவகி என் அத்தை தூங்கிவிட்டார்களா ? ( பெருமூச்சுவிடுகின்றாள். )

தேவ. ( அருகினில் வந்து! ) ஏன் உன் முகம் வாட்ட முற்றிருக் கிறது. உண்மையை என்னிடம் சொல்லலாகாதா ?

பத்மி. உன்னிடம் சொல்வதால் தீமையே உண்டாகும். போ, போ.

தேவ. எனக்கு எல்லாம் தெரியும். பத்மினி ! உன் அந்தரங்கத்தை நான் வெளிப்படுத்தி விடுவேன் என்று பயப்படுகிறாயா.

பத்மி. அல்ல. உன்னிடம் சொல்வதென்றால் எனக்கு வெட்கமாக இருக்கிறது.

தேவ. உன் வெட்கத்தின் காரணம் யான் அறிவேன்.

பத்மி. எங்கே சொல் பார்க்கலாம்.

தேவ. உன் மனதை நமது இராணுவின், வீரர் ஒருவருக்கு அர்ப்பணம் செய்து விட்டாய். என்ன சொல்லுகிறாய்.

பத்மி. ஐயையோ ! இவளுக்கு எப்படித்தெரிந்தது....தேவகி.... இது என்ன வேடிக்கை.

தேவ. வேடிக்கையா....சரி அப்படியே இருக்கட்டும். உனது அத்தை விரும்பியபடி அந்தக் கிழத்தையாவது, அல்லது அந்த வாயாடி வீணையாவது கலியாணம் செய்து கொண்டு சுகமாக இரு. நான் வருகின்றேன்.

பத்மி. நில். நில். என்ன இப்படி கோபித்துக்கொள்ளுகிறாயே.

தேவ. நீ தான் உண்மையை என்னிடம் மறைக்கப் பார்க்கின்றாயே....

பத்மி. தேவகி. இராணுவின் சிறந்த வீரர் ஒருவரை நான், என் பதியாக எண்ணி விட்டது உண்மைதான். என் மன நிலை அறியாத என் அத்தை. வேறு இரு பயித்தியங்களை என்னிடம் அனுப்பி, அவர்களில் எவரையேனும் ஒருவரை நான் மணக்கவேண்டுமென்று கட்டாயப்படுத்துகிறாள். என்னை இந்த ஸ்திதிக்கு கொண்டு வந்திருக்கும் அவள்

சொல்லை வெறுக்கவோ, அல்லது மறுக்கவோ என்னால் முடியவில்லை. இந்த தருமசங்கடத்திற்கு என்ன செய்வது.

தேவ. கவலைப்படாதே. உனக்கு நல்ல வேளை கிட்டியிருக்கின்றது. உன் ஆசை கண்ணாளன் சீக்கிரமே வருவார்.

பத்மி. எனக்கு நம்பிக்கையில்லை.

தேவ. உனது அத்தை விடியற்காலையில் ஊருக்குப் போக ஏற்பாடு செய்திருக்கிறார்களே.

பத்மி. போனால் என்ன மாலையிலோ, அல்லது மறுநாளோ திரும்பிவிடுவார்கள். அதற்குள் அந்த பிள்ளை பூச்சிகள் என்னைப் படாதபாடு படுத்திவிடும்.

தேவ. அவ்விதமாயின் நாளைக்காலையில் அவர்கள் இருவரும் சேர்ந்து உன்னைக்காண வருவது நிச்சயந்தான.

பத்மி. சேர்ந்து வருகிறார்களோ. அல்லது தனியாக வருகிறார்களோ. யார் கண்டார்கள். அத்தை ஊருக்குச் சென்ற பின் வாருங்கள். முடிவு சொல்லுகின்றேன் எனக் கூறி இருவரையும் அனுப்பியிருக்கின்றேன். தலை எழுத்துப் போல் நடக்கட்டும்.

தேவ. பத்மினி. அதே சமயத்தில் நீ மணக்க விரும்பும் காதலனும் வந்துவிட்டால்.

பத்மி. தேவகி ! நின் பவழ வாயில் தேன்மாரி பொழியட்டும்

தேவ. அப்படியா....அவர் பெயரென்ன.

பத்மி. அதெல்லாம் உனக்கு எதற்கு.

தேவ. எனக்கல்ல அம்மா. உனக்குத்தான். பகதூர் பீம்சிங் உனக்கு ஏற்ற புருஷர்தான்.

பத்மி. ஹா! ஹா! என்ன ஆச்சரியம். என் காதலரின் பெயர் இவளுக்கு எப்படித் தெரிந்தது. பிரிய தேவகி உண்மையில் நீ ஓர் அபூர்வ மந்திரக்காரி என்றே நினைக்கின்றேன். எனக்கு அவரைப்பற்றிய....

தேவ பத்மினி! நாளைக்காலையில் உன் காதலர் இங்கு நிச்சயமாக வருவார். இராஜ காரியமாக வந்திருப்பதால் உன்னைக்கண்ட பின் உடனே செல்வார். அதற்காக நீ வருத்தப்படலாகாது. என்ன சொல்லுகிறாய்

பத்மி. ஆ இது உண்மையா? நானே பாக்யவதி....சந்தேகமில்லை. இதோ இம்மாலையை நீ அணிந்து கொள்.... நான் வேறு மாலைகளை அணிந்துகொள்ளுகிறேன். (சென்று திரும்பி)....ஆமாம் அவரை உனக்கு எப்படித்தெரியும்.

தேவ. என் புருஷன் அவரிடம் இப்பொழுது சேவை செய்கின்றார். சற்று முன்பாக, எனது வீட்டிற்கு வந்த அவரிடமிருந்து பகதூர் பீம்சிங்கின் வருகையையும், அவர் உன் மீது கொண்டுள்ள மெய்க்காதலையும் அறிந்தேன். நாளைக்காலையில் உன் காதலரை இங்கு கட்டாயம் அழைத்து வருமாறும் அவரிடம் உறுதி பெற்றிருக்கின்றேன்.

பத்மி. ஆ! இந்த உதவிக்கு என்ன செய்தாலும் போதாது. கண்ணே தேவகி! (தேவகியைத் தழுவுகிறாள்.)

தேவ. விடு, விடு, என்னை. அப்பாடி-என்ன இப்படிக் கட்டிப் பிடித்தனை. அதற்கு நான் ஆளல்ல. நான் வருகிறேனம்மா.

பத்மி. ஸ் !....கோபித்துக் கொள்ளாதே. நேரமாகிறது. நான் உடனே சென்று அலங்கரித்துக் கொள்ளட்டுமா....

தேவ. இந்த ஆடை ஆபரணமே போதும். நான் சொல்வதைக் கேள்.

பத்மி சீ. உனக்கு ஒன்றுமே தெரியாது. வா உள்ளே.

தேவ. இரவு அதிகமாகி விட்டது. தூங்கு. காலையில் அலங்கரித்துக் கொள்ளலாம்.

பத்மி. காலையில் என்ன உடை உடுத்திக்கொண்டால் அழகாக இருக்கும் என்பதை கண்ணுடியின் உதவியினுலும், உன் உதவியினுலும் இப்பொழுதே முடிவு செய்துதான் ஆக வேண்டும்—என்ன புடவை கட்டிக்கொள்ளலாம் சொல்.

தேவ. கண்ணுடிக்கு முன் நின்று கொண்டு யோசித்துத்தான் பாரேன்.....

பத்மி. சரி. தலைக்குப் புதிய புஷ்பங்கள் வேண்டுமே.

தேவ. ஆமாம். உன் தலைக்குப் புஷ்பம் வேண்டும், உன் காதலருக்குப் போட மாலைவேண்டும். வரும் இரு மாப்பிள்ளைகளுக்கு....

பத்மி. வெண்சாமரம் வேண்டும்....என்ன தேவகி விளையாடுகிருய்.

தேவ. என்னகோபம்! சரி உன்னை மனக்க விரும்பும் காலிகளின் பெயரென்ன.

பத்மி. ஒரு மூடனின் பெயர் மோகன்சிங். மற்ருெரு மிருகத்தின் பெயர் சர்தார் படேசிங் பகதூராம்....

தேவ. அடே அப்பா. பயமாகத்தான் இருக்கிறது........சரி எனக்குத் தூக்கம் வருகிறது. நீ சென்று விடிய விடிய

அலங்காரம் செய்து கொள். நான் இவ்விடத்திலேயே படுத்துக்கொள்ளுகிறேன்.

பத்மி. அதெல்லாம் முடியாது. நான் தூங்கின பிறகு தான் நீ தூங்கமுடியும். வா. வா. (இழுத்து செல்லுகிறாள்.)

[ ஒன்பதாம் களம் முடிகிறது. ]

## களம் 10.

காலம் :— காலை.

இடம் :— பத்மினியின் வீட்டின் ஓர் கூடம்.

நடர் :— பத்மினி, தேவகி, ஜயசிங், பீம்சிங், மோகன் சிங், சர்தார் படேசிங் பகதூர்.

[ பத்மினியும் தேவகியும் சந்தோஷத்துடன் பிரவேசிக்கிறார்கள். எதிரில் பீம்சிங்கும் ஜயசிங்கும் யோசனையுடன் பிரவேசிக்கின்றனர். ]

பீம்சி. பத்மினி! நீ என்மீது கொண்டுள்ள மெய்க்காதலையும் பெரும் தியாகத்தையும் நினைக்கும்பொழுது என்மனம் பரவசமடைகின்றது. ஆயினும் பிரியே! என் நிலைமையை நன்கு யோசித்துப்பார். நானோ சதாப் போர்க்களத்தில் வாழ்பவன். எந்த நிமிஷத்திலும் எனது உயிர் போகலாம் ஆகவே என்னை நீ மணக்க விரும்புவது, துன்பத்தைத் தானே தேடிக்கொள்வதுபோல் ஆகும்.

பத்மி. நிறுத்துங்கள் உங்கள் பிரசங்கத்தை. என் உடல் தங்களுடையது. வேறு ஒருவனை மணப்பது இந்த ஜன்மத்திலல்ல.

தேவ. பத்மா! இன்று அதிகாலையில் உன் அத்தை ஊருக்குப் புறப்படுவதற்கு முன், உன் காதலர் விஷயமாகத் தெரிவித்தேன்.

பத்மி. ஆ! அவர்கள் என்ன தெரிவித்தார்கள்.

தேவ. பகதூர் பீம்சிங், பத்மினிக்கு ஏற்றவர்தான். பவானி அருள் இருக்குமாயின், பத்மினியை அவருக்கே மணம் செய்விக்கின்றேன் எனக்கூறினார்கள்.

பத்மி. பவானியினின் அருள் பரிபூரணமாகக் கிடைத்துவிட்டது. காதலா! இனி நான் யாருக்கும் பயப்படவேண்டியதில்லை. என்னைக் கட்டி அழ நினைக்கும் அந்த மூட ஆத்மாக்களுக்குத் தக்க புத்தி கற்பித்து இனி இவ்வீட்டின் எல்லையிலேயே திரும்பாமல் செய்து விடுகின்றேன்.

பீம்சி. ஏன் அப் புனிதகாரியத்தை நானே முடித்து விடுகின்றேன்.

பத்மி. அல்ல யானே செய்து முடிக்கின்றேன். அவசியமாயின் தங்கள் உதவியை வேண்டுகின்றேன்........சரி அவர்கள் வரும் நேரமாயிற்று. காதலா! நான் கூப்பிடும் வரை தாங்கள் என்னுடைய படுக்கை அறையில் சந்தோஷமாக இருக்கவேண்டும்.,.......

ஜயசி. படுக்கையறையிலா........அடமகாதேவா.

பீம்சி. ஸ்........ஜயசிங் பேசாமல் இரு. காதலி! உன் விருப்பப் படியே ஆகட்டும்.

பத்மி. அதுதான் நல்லவர்களுக்கு அழகு. வாருங்கள் (பத்மினி செல்ல, பீம்சிங் அவளைத் தொடருகிறான்.)

ஜயசி. தலைவரே! ஜாக்கிரதை! வெகு ஜாக்கிரதை! ஏமாந்து விடாதீர்கள். பெண் என்றால் பேயும் தன்னை மறந்து இரக்கம் கொள்ளும்.

தேவ. அப்படியா! பேயே பெண்ணிடம் இரங்குமென்றால், நீர் ஏன் என் மீது இரங்கவில்லை...வாருங்கள்........

ஜயசி. ஐயையோ....என்னைப் பேயன் என்று நினைத்தனை. கையைத் தொடாதே. யாராவது பார்த்தால்........

தேவ. நன்றாகச் சிரிக்கட்டுமே.

ஜயசி. இதென்னடா கஷ்டம். மெல்லவோ அல்லது முழுங்கவோ முடியவில்லை.... (உரக்க) தலைவரே! நாம் வந்திருப்பது இராஜகாரியம். ஞாபகமிருக்கட்டும்.

தேவ. (அவன் வாயைப் பொத்திய வண்ணம்) ஸ்...........அவர்கள் சந்தோஷத்தைக் கெடுக்காதீர்கள்—வாருங்கள் உள்ளே. (உள்ளே தள்ளிச் செல்லுகிறாள். பின்பக்கம் பத்மினி நாணத்துடன் பிரவேசித்து அமருகிறாள்)

பத்மி. மனமே பொறு....உன் மனோரதம் நிறைவேறும்........ (தேவகி அவசரத்துடன் பிரவேசித்தல்.)

தேவ. பத்மினி! அந்தக் கிழம் வருகிறது.

பத்மி. வந்துட்டுதா....வரட்டும். தேவகி! சமயத்திற்குத்தக்கபடி நடந்துகொள்

[மோகன்சிங் இருமிக்கொண்டும், தும்மிக்கொண்டும், ஒய்யாரமாய் பிரவேசித்தல்]

மோக. பத்மினி !

பத்மி. வரவேண்டும். வரவேண்டும். உட்காருங்கள்.

மோக. சந்தோஷம். சீ என்ன பனி ! தலையைத் துளைக்கின்றது. மகா பலசாலியாகிய எனக்கே இப்படியிருந்தால் இன்னும் வயதானவர்களுக்கு எப்படியிருக்கும்—ஈம்,.......பத்மினி ! உன்னைத்தரிசிக்க இன்று அதிகாலையிலே புறப்பட்டேன். துரதிர்ஷ்டவசமாக ஒரு சிறு விபத்து நேரிட்டதனால் சற்றுத் தாமதமாகிவிட்டது. மன்னிக்கவேண்டும்.

பத்மி. அதனால் பாதகமில்லை. தேவகி ! நாங்கள் பேசிக்கொண்டிருக்கும்போழுது யாராவது வந்தால் உடனே ஓடிவந்து தெரிவி. ( தேவகி செல்லல் )

மோக. ஆஹா ! என்மீது எவ்வளவு பிரியம் வைத்திருக்கிறாய். இளநங்கையே ! நீ எனக்குச் சொந்தமானவுடன் நின் குறிப்பறிந்து நானும் நடப்பேன்.

பத்மி. சந்தோஷம். வரும்போது ஏதோ விபத்து நேரிட்டதாகக் கூறினீர்களே?

மோக. அது கிடக்கட்டும். எங்கே நினது மலர்க்கரத்தை கொடு. ரேகையைப் பார்போம். (காயங்களையுடைய தனது வலது கையை நீட்டுகின்றான்.)

பத்மி. ஆ ! இதென்ன கையில் கட்டு. சீக்கிரம் சொல்லுங்கள் இல்லையேல் என் மனம் தாளாது மாண்டுவிடுவேன்.

மோக. மாங்குயிலே ! வேண்டாம். வேண்டாம். இதோ சொல்லி விடுகின்றேன். நடந்ததை உள்ளபடியே கூறுகின்றேன்.

பத்மி. அடடா ! என்ன அன்பு என்ன கனிவு. உண்மையில்

தங்களைப்போன்ற சிறந்த அருமையான பிராணியை உலகில் காண்பது மிகவும் அரிது.

மோக. சந்தோஷம். காதலி வரும் வழியில் ஏற்பட்ட ஆபத்தின் காரணமாகவே, நான் என் கையைக்கட்டிக்கொண்டு வர நேரிட்டது. எனவே நீ அதற்காக வருந்தக்கூடாது.

பத்மி. வருந்தவே இல்லை. விஷயத்தைச் சொல்லுங்கள்.

மோக. கோதையே! நின் கருணை யாருக்கு வரும். சொல்லுகின்றேன் கவனமாய்க்கேள். காலையில் எழுந்தவுடன் நித்திய விதிகளை முடித்துக்கொண்டு, அலங்காரசகிதனும் ஊடுருவிப் பாயும் நின் வேல்விழிப் பிரசாதத்தைப்பெற, நல்ல சகுனம் பார்த்துக்கொண்டு புறப்பட்டேன். (இருமுகிறான்.) என்னை — என்னை மயக்கிய உன்னை, வெறுங்கையோடு காணலாகாதென நினைத்தேன். எனது அருமைப்பெற்றோர்கள், நான் சிறு குழந்தையாய் இருக்கும்பொழுது என் தொட்டிலின் மேல் கட்டிய கிருஷ்ண விக்ரகத்தை உனக்கே கொடுத்து விடலாமென முடிவு செய்தேன். அதனை நன்றாகக் குளிப்பாட்டி துடைத்து வெளியே எடுத்துவந்தேன். (இருமிவிட்டு) ஆம் வந்தேன்........

பத்மி. என்ன பிரீதி........

மோக. ஒரு வண்டிக்காரன். மிக்க மரியாதையுடன் எதிரில் நின்று, என்னை வணங்கி "ஐயா தாங்களும் தங்கள் குழந்தையும் என் வண்டியில் ஏறுங்கள்—கூலி எது கொடுத்தாலும் வாங்கிக் கொள்ளுகிறேன்" எனக்கூறி அப்பொம்மையைப் பிடுங்கி வண்டியில் வைத்து "பாப்பா! தூங்கு" என்றான்........

பதிமி. போக்கிரித்தனம்........பிறகு

மோக. அருகிலிருந்த சில வண்டிக்காரர்களும் இன்னும் பல காலி களும் கலீர் என்று கைகொட்டிச் சிரித்தார்கள்.

பதிமி. சிரித்தார்களா! என்ன ஆணவம். தாங்கள் பேசாமலா நின்றீர்கள்.

மோக. இல்லை கோபம் வந்துவிட்டது. காலிப்பயல்களே! கேலியா செய்கிறீர்கள்! மரியாதையாக இருங்கள் எனக் கூறி....இதோ என்னைப் பார்—(குத்துச்சண்டை செய்பவன் போல் நின்று) இப்படி நின்றேன்.

பதிமி. ஆ! இந்த வயதிலேயே இப்படி நிற்கின்றீர்களே! இன் னும் இளம்வயதில்........

மோக. கேட்க வேண்டுமா?

பதிமி. வேண்டாம்—வேண்டாம். பிறகு.

மோக. பிறகென்ன—ஒரு போக்கிரிப்பயல் என் கௌரவத்தையும் வயதையும் மறந்து பளீர் என்று ஒரு சவுக்கடி கொடுத்தான் கையில் இரத்தம் பீரிட்டதைப் பார்த்தேன்—சிறிது நேரத் தில் இவ்வுலகையே மறந்து கீழே விழுந்துவிட்டேன்.

பதிமி. ஒரே அடியில், தங்களைமயங்கச் செய்த அந்த சுத்த வீரன் யாவன்?

மோக. எனக்குத் தெரியாது. நினைவு வந்ததும் எழுந்து பார்க்கும் போழுது, நடுவீதி நாராயணன் வீட்டின் திண்ணையில் இருப்பதையுணர்ந்தேன்.

பதிமி. பாபம்! பாபம்! தெய்வத்திற்கு புத்தியில்லை. ஐயோ அந்த அடியைத் தாம் எவ்வாறு சகித்தீரோ.

மோக. அதைக்கூட அடியேன் பொருட்படுத்தவில்லை. நான் சந்தோஷத்துடன் உனக்கு அளிக்க எண்ணிய மிகப் பழமையான, வெகு அருமையான, அந்த ஸ்ரீ கிருஷ்ண விக்ரகத்தையும் சண்டாளர்கள் எடுத்துச்சென்று விட்டார் களே. அவர்களை யார் கேட்பது........(அழுகிறுன்) ஹரே கிருஷ்ணு கோவிந்தா, கோபாலா,....

பத்மி. அடடா என்ன கஷ்டம். அழாதீர்கள். சிவனே! என்று வீட்டில் பழங்கணக்குகளை பரிசீலனை செய்து காலத்தைக் கழிக்கலாகாதா........

மோக. இதென்ன குழந்தைபோல் பேசுகிறுய்—சதா உன்னையே நினைந்து உருகும் நான் எப்படி பழங்கணக்கை பார்க்க முடியும். சீக்கிரமே என் மனைவியாக நீ வந்து விடுவாயாகில் பழங்கணக்குகளை பலமுறையும் சேர்ந்து பார்க்கலாம். என்ன சொல்லுகிறுய்?

பத்மி. அது இருக்கட்டும்—தாங்கள் என்னைப்போன்றவர்களை மணம் செய்துகொண்டால், எவ்விதம் எங்களை சந்தோஷப் படுத்துவீர்கள்?

மோக. அறிவிலும், அனுபவத்திலும், செயலிலும், பெரியவனுகிய என்னை இன்னும் நீ அறியவில்லை. பேதை பெண்குயிலே! என்னை மணப்பவளின், விருப்பப்படி ஆடை ஆபரணங் கள் வாங்கி அளிப்பேன். வீட்டு வேலை செய்யாவண்ணம் பாதுகாப்பேன். இன்னும் எந்தெந்த விஷயங்களில் அவள் மனம் சந்தோஷம் அடைகின்றுளே, அந்தந்த விஷயங்களில், நானும் உதவிசெய்வேன். இன்னும்....

பத்மி. ஆஹா! தம்மைப்போன்ற நல்ல அனுபவம் பெற்ற பெரிய வர்களை மணக்க என்னைப்போன்ற பாழும் ஸ்திரி ஜன்மங் கள் என்ன பாக்யம் செய்திருக்கவேண்டும்.

மோக. உண்மையில் நீ என்னை மிகவும் புகழ்ந்து பேசுகிருய். குணபூஷணியே! இனி தாளமாட்டேன். என் காதல் உண்மையானது. மிக்க உறுதியானது. வேண்டு மென்ருல் இதோ பார் அதன் உண்மையை. (ஓர் சிறு துணிமூட்டையைக் காட்டி) இது என்ன தெரியுமா?

பத்மி. கந்தல் மூட்டை.

மோக. ஸ் பொறு. (மூட்டையிலிருந்த ஓர் ஓலையை எடுத்து படித்தல்) அழகுநிறைந்த சௌபாக்யவதி பத்மினி தேவிக்கு, காதலனுக வரப்பாடு படும் அனுபவம் நிறைந்த சிரஞ்சீவி மோகன்சிங், அளிக்கும் பரிசுத்த மான காதல் துதி....

பத்மி. காதல் துதியா! எந்தப்பட்டுக் குஞ்சலம் அதை எழுதியது

மோக. ஸ். அவசரப்பட்டு, மரியாதைக் குறைவாக உன் காதல னுக வரப்போகும் என்னிடம் நீ இவ்வாறு பேசினல், நான்; ஆம்....மனம் தாளாது ஏங்கி மாண்டுவிடுவேன்.

பத்மி. ஒகோ தாங்கள்தானு அதை எழுதியது. மன்னிக்கவேண் டும். எங்கே அதை என்முன்.........

மோக. அரங்கேற்றி விடுகிறேன். குற்றமிருந்தால் மன்னித்துக் கொள். (வெகுசிரமப்பட்டுத் தட்டுத் தடுமாறிப் படிக்கிருன்,)

ஆவியே யுனைமணக்க அனுதினமும் நினைந்துருகும் ஆசையாலே
பாவியேன் படுந்துயரம் பகருதற்கு எளிதாமோ பதறியுன்பால்
தாவியே வருமிவனுல் சுகமில்லை யென்றெண்ணித் தள்ளிடாதே
தேவியே எனை மணக்கத் திருவுளத்திலே கிருபை செய்குவாயே.

பாட்டு எப்படி?

பத்மி. தங்கள் உள்ளக்கருத்தை அப்படியே அள்ளி வீசி எறிந்து விட்டீர்கள். ஆனல் அர்த்தம் தான் சரியாகப் புரியவில்லை.

மோக. ஹ, ஹ, ஹா. உன்னைப்போன்ற எழில் இள நங்கைக்கு வாசித்தால் புரியாது. இராகத்துடன் இப்பொழுது படிக்கின்றேன் கேள். நன்றாகப்புரியும். (வெகுகஷ்டப்பட்டு, பலவித ராகங்களைப்பாடி கடைசியாக கனைத்து இருமி விட்டு) சரீரம் சரியாக இல்லை....சீ. சீ! பத்மினி.... இரண்டு மூன்று நாட்களாக ஜலதோஷம், இருமல் இரண்டும் என்னை வாட்டுகின்றது. அதனால் நீ வருத்தப்படாதே.

பத்மி. இல்லை. சத்தியமாக இல்லை.

மோக. சந்தோஷம் (கொஞ்சம் பொடியை இழுத்து) எப்படியிருந்தாலும், என் அம்பாள் பத்மினிதேவியின் சன்னதியில் பாடியே முடித்து விடுகின்றேன். ஆமாம், இதை எந்த இராகத்தில்........

பத்மி. என் முகாரியிலேயே பாடி முடித்து விடுங்கள்........

மோக. முகாரியிலா

பத்மி. யோசனையே வேண்டியதில்லை. இந்த சமயத்திற்கு அந்த இராகம்தான் ஏற்றது.

மோக. வனிதாமணியே, இஷ்டப்படியே, பாடுகின்றேன்.

[பலவிதக் குரல்களுடனும், உடல் கோணாறுகளுடனும் ஒருவிதமாய் பாட்டை அழுது முடிக்கின்றான்—தேவகி திடீரென ஓடி வருகிறாள்]

தேவ. ஐயையோ, ஐயையோ, ஐயையோ.

மோக. ஆ! என்ன சமாசாரம்.

தேவ. அத்தை வருகிறார்கள்....

பத்மி. வருகிறார்களா! சீ! இந்த சமயந்தானா வரவேண்டும். ஐயா! உடனே ஒளிந்து கொள்ளுங்கள்.

தேவ. ஈம். - சீக்கிரம். சீக்கிரம்.

மோக. உன் அத்தைக்குப் பயந்து நான் ஏன் ஒளிந்து கொள்ள வேண்டும். அவர்கள் உத்திரவு பெற்றுத் தானே இக் காதல் வேட்டையில் நாயேன் ஈடுபட்டேன்.

தேவ. அட கஷ்டகாலமே: சீக்கிரமே வந்து ஒளிந்து கொள்ளுங்கள்.

பத்மி. ஆம். சிறிது நேரத்தில், உமது மணவிஷயத்திற்குத் தக்க முடிவு செய்து விடுகின்றேன். என் கண்ணல்ல........

மோக. என்ன இனிய வேண்டுகோள். புனிதமானேன். தன்யனானேன். மிருது பாஷணியே! பணிந்தேன்....ஆனால், ஈரமில்லாத அறையில் என்னை மறைத்து வைக்கச்சொல்.

பத்மி. தேவகி! இவரை எங்கு மறைத்து வைக்கலாம்.

தேவ. மாட்டுக்கொட்டகையில் மறைத்து வேலியை மூடி விடுகிறேன்.

மோக. ஐயையோ! நான்மாட்டேன். மாடு முட்டும். தரை வேறு ஜில்லென்று இருக்கும்....

பத்மி. மாடு மேயப் போய்விட்டது....தேவகி! தரையில் கொஞ்சம் வைக்கோலைப் பரப்பி....

தேவ. மேலேயும் வைக்கோலைபோட்டு மூடி விடுகிறேன்.

மோக. அட இராகுகாலமே. இப்படியா என் தலைவிதி. ஏற்கனவே ஜலதோஷம். இன்னும் ஈரத்தில் நின்றால் என் கதி என்ன ஆகும். தேவகி! கையிலிருந்த பொடிகூட தீர்ந்து விட்டதே.

தேவ. சனி ஒழிந்தது ஈம். சீக்கிரம் வாருங்கள்.

மோக. வாட்டுமா பத்மினி !

பத்மி. ஐயோ போங்கள். எங்கள் மானத்தை காப்பாற்றுங்கள்.

மோக. உத்தரவு (போய் திரும்பி) ஆமாம். மாட்டுக்கொட்டகையில் எவ்வளவு நாழி மறைந்திருக்கவேண்டும்.

தேவ. அதை அங்கு சொல்லி அழுகின்றேன் வாரும். (கைக் கோலைப் பிடித்திழுக்கிருள்.)

மோக. பத்மினி ! பத்மினி.... (அழுதுகொண்டே மறைகின்ருன்) உள்ளிருந்து படேசிங் பகதூர் பத்மினியைக் கூப்பிடுகிருன்.)

படே. பத்மினி ! பத்மினி !

பத்மி. யாரது....

பகது. நான் தான் சர்தார் படேசிங் பகதூர்.

பத்மி. வா. வா. சரியான வழி செய்கின்றேன் (படேசிங் பகதூர் பிரவேசம்.) வாருங்கள். வாருங்கள். தங்களைத்தான் எதிர் பார்த்துக்கொண்டிருந்தேன்.

படே. நீ குறிப்பிட்ட நேரத்திலேயே நான் வந்து விட்டேன் அல்லவா. (தேவகி பிரவேசம்)....

தேவ. ஆ சர்தார்....

படே. பத்மினி ! தேவகி இங்கிருப்பதனுல்

பத்மி. அவள் நம்முடைய சிநேகிதி. வேண்டியதைச் செய்வாள். கவலைவேண்டாம்.

படே. மெத்த சந்தோஷம். தேவகி ! பத்மினியை மணக்க உன்

உதவி வேண்டும். (உரக்க) செய்வாயா. அல்லவா. என்ன சொல்லுகிருய்?

தேவ. பெண்களிடத்தில் இப்படிப் பேசுகிறீர்களே. இது சரியல்ல, உங்கள் கூச்சல் பக்கத்து அறையில் உறங்கும் அத்தையம் மாளைக்கூட எழுப்பிவிடும் போல் தோன்றுகிறதே.

படே. எழுந்தாலென்ன—தின்று விடுவார்களா. அல்லது மென்று விடுவார்களா.

தேவ. இல்லை. பயந்து விடுவார்கள்.

படே. ஹ. ஹ. ஹ. (சிரித்து) ஆம்.... நீ சொல்வது ஞாயந் தான். பத்மினி உண்மையில் நான் என்ன அவ்வளவு பயங்கா வீரனுகவா தோற்றுகிறேன்....கவனித்துப்பார். (பிரதட்சணம் செய்து காட்டுகிருன்.)

பத்மி. ஆம். இவ்விதமான பயங்கா ரூபத்தையுடைய தாங்கள், என்னை மணக்க முன் வந்ததின் காரணம்.

படே. முதலாவது உன் மீது நான் கொண்டுள்ள அடங்காத பிரேமை. 2-வது உன் அத்தையின் வார்த்தை, 3-வது யான் என்றும் அணிந்துள்ள இப்போர்வாள். இம்மூன்றுமே, உன்னை மணக்கத் தூண்டிய மூலக்கிரகங்கள். ஞாபகமிருக்கட்டும். நிற்க வீரம், சௌந்தர்யம் பிரதாபம், ரூபம் முதலியவைகளில் எந்த அற்பனுவது என்னை மிஞ்சினவனுய் இருந்தால் என்னை வென்று என் பத்மினிக்கு மாலையிடட்டும். இல்லையேல்............

தேவ. ஆ! என்ன வீரம். என்ன தைரியம். எதிரியைச் சிறிதும் மதிக்காமல் இவ்வளவு ஆத்திரத்துடன் பேசுகிறீர்களே. என்னே உங்கள் வீரம்!

படே. ஹ, ஹ, ஹ !........ஒரே தீர்மானந்தான். கத்தியை எடுத்து வீசுவேனாயாகில் இரத்தம் பீரவேண்டும். செத்தோம் என்று மாளவேண்டும். அவ்வளவுதான்.

தேவ ஏது இன்றைக்குத் தாங்கள் மிகவும் கோபம் உடையவர்களாய் இருக்கின்றீர்களே.

படே. ஆ ! அறிந்தீர்களா என் மனப்பான்மையை....மானைப் போல் துள்ளுவேன். மளமளவென்று வாளைச் சுழற்றுவேன். தடபுட, வென்று கர்ஜிப்பேன். குபு குபு எனவே இரத்தத்தைக் கக்கச்செய்வேன்....இவ்வளவிற்கும் எதிரி தப்புவானேயாகில், நான் அவன் அடிமையாவேன். நீ அவன் மனைவியாவாய். அறிந்தனையா என் தீரத்தை.

பத்மி. இது உண்மைதானா. நம்பலாமா.

படே. என்னைப் பொய்யன் என்று எண்ணினை. ஜாக்கிரதை. ஒரே சொல். ஒரே தீர்மானம். சந்தேகமில்லை.

பத்மி. சிறிதுகூட சந்தேகமில்லையா ?

படே. பத்மினி இன்னும் கூறுகின்றேன் கேள். போன ஜன்மத்தில், பாண்டவர்களில் நானும் ஓர் தலை சிறந்த வீரனாக இருந்திருக்க வேண்டுமென்று அக்பர் பாதுஷாவின் அரண்மனை ஜோசியர்கூடச் சமீபத்தில் தெரிவித்தார்

தேவ. ஒருக்கால் அழகிலும் வீரத்திலும் நிறைந்த அர்ஜுனனாகக்கூட ஏன் இருந்திருக்கலாகாது. (சிரிக்கிறாள்.)

படே. ஆ ! தேவகி ! பரிகாசம் நம்மிடம் வேண்டாம். சிரித்த வாயைக் கிழித்தெறிகிறேன் பார்.

தேவ. ஐயையோ ! பத்மினி பயமாக இருக்கிறதே. என் செய்வேன்.

படே. பரிகாச வார்த்தைகள் இந்த சர்தார் படேசிங் பகதூரிடம் பலியாது. பயத்தையே மறந்தவன், யுத்தகளத்திலே இரத்தப் பெருக்கிலே, பீரங்கிகளுக்கிடையிலே ஆவேசத்துடன் திரிந்தவன். ஆற்றிலும் சாவு நூற்றிலும் சாவு என்பதின் உண்மையை அறிந்தவன். அப்படியிருக்க நம்மையே, நீ கேலி செய்வதென்றால்.

பத்மி. தயை செய்யவேண்டும். மகாவீரராகிய தங்களின் மன நிலை யறியாது பேசிய அவளை மன்னிக்கவேண்டுகின்றேன்.

படே. முடியவே முடியாது. அந்த வாய்ப் பட்டிக்கு இவ்வளவு அகந்தையா. ( அடிக்க கையை ஓங்குகிறான். )

பத்மி. ஆ. பொறுங்கள். நான் சொல்வதை தயவு செய்து கேளுங்கள். இந்த சனியன் பிடித்த தேவகியும், என் அத்தையும், இல்லாத சமயம் அறிந்து நான் சொல்லி அனுப்புகின்றேன். அப்பொழுது வாருங்கள். நாம் ஏதாவது ஒரு முடிவுக்கு........

படே. இந்த ஏமாற்றும் வித்தையெல்லாம் யாரிடம்? அத்தைக்கும்; இந்த வேலைக்காரிக்கும் ரொம்பவும் பயந்தவள்போல் நீ நடிக்கிறாயே? உன் அத்தை என்னை அறியாமலா உன்னை மணக்க அநுமதித்திருக்கிறாள். இனி என்னைத் தள்ளி விடவும் அவளுக்குத் தைரியம் உண்டோ....பத்மினி ! குழந்தையைப்போல் விளையாடாதே. நான் ஓர் கௌரவமானவன், புகழுக்கும், வீரத்திற்கும் ஆசைப்பட்டவன். இப்பொழுது நம்மிடம் கண்கட்டிவித்தை வேண்டாம். என்ன சொல்லுகிறாய்?

பத்மி. ஐயா. தயைசெய்து நான் சொல்வதைக்கேளுங்கள்.

படே. கேட்கமாட்டேன். கேட்கவேமாட்டேன். என்னை

ஏமாற்ற எவரும் முடியாது. கோபத்துடன் நின்று (பல்லை நறநற வென்று கடிக்கிறான்.)

பத்மி. வீரரே! கோபம் பொறுக்கவேண்டும்.

படே. ஆ! அறிந்தனையா என்னை! நல்லது. இனி சுருக்கமாக, கடைசியாக, என் உள்ளத்தை உனக்குத் தெரிவிக்கின்றேன்....பத்மினி, உன் திரு உருவத்தை நான் நினையாத வேளையே இல்லை. இது பொய்யாயின் இடி விழட்டும். ஆனால் என்னைபோல் மற்றொருவனும் உன்னை மணக்க முயற்சிப்பதாக தெரிகிறது. அவன் உன்னை அடைந்தால், ஆம் அவன் பாக்யசாலிதான். இந்த சர்தார் படேசிங் பகதூர்—ஆம் ஏங்கி மாள்வேன்........ஆனால் பத்மினி—என் வாளின்மேல் ஆணை. அவனை நேரில் இங்கு நான் பார்த்தேனேயாகில், அவன் இறப்பான். பின்னர் நீ என்னை மணந்துதான் தீரவேண்டும்.

பத்மி. ஏன் வேண்டுமென்றால் அவரை நீங்கள் இவ்விடமே சந்திக்கலாமே.

படே. (திடுக்கிட்டுச் சுற்றிப்பார்த்து பின்னர் தைரியத்துடன்) நம்மை ஏமாற்றப்பார்க்கிறார்கள். இருக்கட்டும். பத்மினி! இப்பொழுதே அவனைநான் சந்திக்கலாமா. (உரக்க) எங்கே அவன்?

தேவ. ஸ்....அவர் அடுத்த அறையில்தான் இருக்கிறார்.

படே. (திடுக்கிட்டு நடுங்கி)....... பக்கத்தறையிலா. (தனக்குள்) அட கஷ்டமே—(ஒருவாறு சமாளித்துக்கொண்டு மெல்ல) நான் பழி வாங்குகிறேன். இரத்தம் கொதிக்கின்றது கோபத்தினால் உடல் நடுங்குகின்றது....பத்மினி! நீ பயப்படாதே

பத்மி. இல்லை. அதற்கு மாருக உங்களைப்பார்க்க எனக்கு இப்பொழுது மிகவும் சந்தோஷமாகவே இருக்கிறது. அவனை முடித்து விடுங்கள். பிறகு தொந்தரவே இல்லை.

தேவ. அவ்விதமாயின் நானே சென்று உடனே இங்கு அவரை அழைத்து வருகிறேன். (தேவகி செல்ல எத்தனித்தல்.)

படே. ஸ்....தேவகி நில், நில். கொஞ்சம் பொறு. உண்மையில், எனக்கு இவ்வளவு கோபம் வந்ததே இல்லை....பக்கத்து அறையில் அவர் இருக்கிருர் என்று உனக்கு நிச்சயமாகத் தெரியுமா?....முறைப்படி வாள்யுத்தம் புரிந்து, அவரைத் துண்டு துண்டாக சிதைத்து.... சீ! அப்படிச்செய்தால், இந்தப் பெரிய இடத்திற்கல்லவா அபக்யாதி நேரிடும். அது ஒரு நாளும் கூடாது. என்னல் கெட்டபெயர் வரவே கூடாது........(மறித்து) பொறு! பொறு! தேவகி........ என்ன செய்யலாம்—ஆம். பக்கத்து வீதிக்கு உடனே செல்லுகின்றேன். அவர் அங்கு வரும் சமயம் பார்த்து, இப்போர் வாளை அவர் உடலில் பாய்ச்சி, சாக்கடையில் தூக்கி, எறிந்து வருகின்றேன். (போக எத்தனித்தல்.)

பத்மி. நில்லுங்கள். தாங்கள் செல்லவே கூடாது. அவருடன் தாங்கள் யுத்தம் செய்து கொன்ருல்தான், நான் தங்களுடன் இன்பமாக வாழமுடியும் (வழியை மறைக்கிருள்.)

தேவ. (பகதூரை தானும் மறைத்துக்கொண்டு) பகதூர்! என் எஜாமனிக்குக் கத்திச்சண்டை என்ருல் மிகவும் சந்தோஷம். அவள் ஆசையை நீங்கள் இங்கேயே பூர்த்தி செய்து விடுங்கள்—இதோ அவரை ஒரு நொடியில் அழைத்து வருகின்றேன். (வெளியே ஓடுகிருள்.)

பத்மி. வீரபுருஷரே! வருபவருக்குச் செம்மையாக சூடு கொடுத்து சுவர்க்கலோகம் அனுப்பி விடவேண்டும். அதனல் உமது

வீரம் பிரகாசிக்கவேண்டும். பிரேமையுடன் நான் தம்மைக் காதலிக்க வேண்டும்.

படே. (தனக்குள்) உன் பிரேமையில் இடிவிழட்டும். என்னடா கஷ்டம்.

பத்மி. ஆ! அதோ அவர்....படாடோபமாகப் பேசிப் பயப்படுத்தி, உங்கள் போர் வாளினுல், அவரை முடித்து விடுங்கள். அதோ வருகிறூர். எடுங்கள் வாளே. செல்லுங்கள் முன்னே.

படே. (நடுக்கம் உண்டாகிறது.)ஸ்....வீணுக ஏன் பதறுகின்றுய். இப்படி நடுக்கம் கொள்ளுகிறுய்.

பத்மி. நான் நடுங்கவில்லே. வீராதி வீரரே. என்னேப்பற்றிச் சற்றும் பயப்படவே வேண்டாம். ஈம் ஈம். வீரம். வீரம்.... சிங்கம் மாதிரி பாருங்கள்.

படே. (தனக்குள்) வீரமாவது பூரமாவது கடவுளே! என்னேக் காப்பாற்றும். (தேவகி மோகன்சிங்கை அழைத்து வருகிறுள்.)

தேவ. (மோகன் சிங்கிடம் தனிமையாக) ஐயா! அவர் வெறும் தடபுடல் பேர்வழி. காரியத்தில் ஒன்றும் இல்லே.

படே. (பயத்துடன்) என்னமோ. நான் உன்னேயே நம்பி இருக்கிறேன்....இருந்தாலும் நீ அவனுடைய வீரத்தை சரிவா அறிந்திருக்கமாட்டாய் என்றே நினேக்கின்றேன்

தேவ. வீரமாவது, சீரகமாவது. சுத்த சோதா. நிச்சயமாக நம்பும் என் வார்த்தையை.

மோக. (தனக்குள்) பின் கவலேயே இல்லே. நம்மை போலத் தானு அவனும்—தேவகி!

படே. (தனக்குள்) அவன் பார்வை அவ்வளவு பயமாக இல்லை ஆனாலும் நான் முதலில் எதிர்க்கமாட்டேன்.

தேவ. மோகன்சிங் ஈம்—கேளுங்கள் அவனை.

மோக. ஈம் கேட்கிறேன். (பின்னால் ஓர் அடி நகர்ந்து சிறிது பயத்துடன்) ஐயா....தாங்கள் இங்கிருக்கும் தேவகியிடம் என்னைச் சந்தித்துப் பேச விரும்புவதாக....(தனக்குள்) சீ என்ன பயங்கரமான பார்வை. நமக்கேன் வம்பு (திரும்பிக் கொள்ளுகிறான்.)

படே. ஓகோ, கோபத்துடன் திரும்பியிருக்கிறான். இந்த நிலையில் என்ன செய்வது—(பயத்துடன்) ஐயா. நான் யாரிடமும் மரியாதையாகவே பேசுபவன்........சமயங்களில் பேசாமலும் இருந்து விடுவேன்....ஆனால் எதிர்பாராத சந்தர்ப்பம் நேர்ந்தால்.... (பின்பக்கம் திரும்பிக்கொண்டே) அவ்வளவு தான்.

பத்மி. ஸ். பகதூர் தைரியமாக எதிர்த்துத் தாக்குங்கள்.

தேவ. மோகன சிம்மமே! அந்த வாய்ச்சொல் வீரரின் மாறுதல்களைக் கண்டு பயப்படாதீர்கள். அது பச்சோந்தி போல் மாறும். சீக்கிரமே சினங்கொண்டு சீறுங்கள்.

மோக. (தேவகி பக்கம் திரும்பி) இரக்கமே இல்லாத மகா பாதகியே! நீ ஓர் கொலைகாரி—உன்னைப் பார்த்தாலே பத்ரகாளி போல் இருக்கின்றது. அம்மா தயே! நீ இந்த மாதிரி அவசரப்படுத்தினால், என்னால் ஒன்றுமே செய்ய முடியாது. என் மூச்சுத் திணறுகிறது. என்னை மாட்டுத் தொழுவத்திற்கே கொண்டு சேர்த்துவிடு, புண்ணியமுண்டு.

தேவ. என்னகூறினீர். கோபமாகப் பேசுகிறீர்களா இல்லையா?

மோக. ஐயோ பேசுகிறேனே........ஐயா ! தங்களுக்கு மரியாதை யாகப் பேசத்தெரியுமென்று சற்றுமுன் கூறினீர்கள். ஆகவே தாங்கள் என்னுடன் மரியாதையாகவே பேச சீக்கிரமே வேண்டுகின்றேன்.

படே. பெரியாரே ! உங்களுக்கும் எனக்கும் எவ்வளவோ வித்தியாசங்கள் இருக்கலாம்.

மோக. நம்முடைய வித்தியாசங்களை உடைப்பினில் தான் போட வேண்டும். (சட்டென்று தேவகி பக்கம் திரும்பி நடுங்கி) ஆ....ஆ என் செய்வேன். தேவகி ! நீயே துணை.

தேவ. சபாஷ். நீரே தீரர், வீரர், சூரர்.

பத்மி. சர்தார்! இது என்ன மௌனம். சுடச் சுடக் கொடும் பதில் என்னைக் கைவிடவா போகிறீர்கள்? ஆ தெய்வமே !

படே. ஒரு நாளுமில்லை. ஓர் விஷயத்தை நான் முடிவு செய்தேனே யாகில், ஆர அமர, யோசித்துத்தான் செய்வேன். அது தான் எங்களைப்போன்ற ஆடவர்களின் வழக்கம் சரி நடந்தது நடந்து விட்டது. வேறு வழியில்லை. மோகன் ! தங்களிடம் தனிமையாக ஒரு வார்த்தை பேசவேண்டு கின்றேன்.

மோக. சும். கிட்டே நெருங்காதீர். இங்கிருந்த படியே நின்று எனக்குப் பதில் சொல்லத் தெரியும். வீணாக பத்மினிக்காக என்னுடன் போட்டி போடாதீர். அவள் என்மீது பரி பூரணக்காதல் கொண்டு வருந்துவதையும், என்னைத் தவிர வேறு எவரையும் மணக்கமாட்டாள் என்பதையும் நான் நன்கு அறிவேன். எனவே எனக்கு விரோதமாக நீர் குறுக்கிட்டால், நமது முடிவு யாதோ அறியேன்.

தேவ. ஆஹா—சபாஷ், சபாஷ்.

பத்மி. பகதூர்! என்ன அவமானம். கொஞ்சம்கூட சகிக்க வில்லையே. பெரியவாராஜலும், என்ன வீரமாகப்பேசுகிறார்.

படே. அப்படியா. பத்மினி! இவ்வளவு தைரியமா உனக்கு மோகன்சிங்! நான் இனி சும்மா இருக்கமுடியாது போல் தோன்றுகிறது. வீரரே! இவள் மீது தமக்குள்ள காதலை அடியோடு மறந்து மரியாதையாக வெளியில் ஓடிவிடும். இல்லையேல், (வாளை உருவி கோபத்துடன் நின்று, பின்னற் பயந்து நின்று தனக்குள்.) இனி நம் உயிர் போக வேண்டியதுதான்.

மோக. ஐயையோ! தேவகி. யாராவது அரண்மனைச் சேவகர்கள் இருந்தால் இங்கு அழைத்து வா. ஆ! தெய்வமே. எங்கள் இருவரையும் அவர்கள் கைதுசெய்து அழைத்துச் செல்லட்டும். இல்லையேல், நாங்கள், ஒருவருக்கொருவரை சரிவர அறிந்து கொள்ளமுடியாத நிலைமையில் இறக்க நேரிடும். (தனித்து வணங்கி) போ சீக்கிரம்.

தேவ. இல்லை. நான் சொல்லும் இரகசியத்தைக் கேளும். சட் டென்று வாளை உருவி கோபத்துடன் நில்லும். அந்த வாய்ப்பந்தல் வீரர் அடங்கி, நழுவி ஓடி விடுவார்,

மோக. நிச்சயமாக ஓடி விடுவாரா? ஏதோ நீ சொல்வதை இந்த சமயம் மாத்திரம் கடைசி முறையாய் கேட்கின்றேன் (கை நடுக்கத்துடன் வாளை உருவி) இரக்கமற்ற கொடூரமான மிருகமே! நரகமே இடிந்து இங்கு விழுந்து எங்களைப் பிரித்து விடட்டும்? தேவகீ! போதுமா.

தேவ. இன்னும் நெருங்கித் திட்டுங்கள்.

[கையில் வாளேந்தி கதியற்று பயந்து சிலைபோல் நிற்கும் பகதூர்சிங்கை பத்மினியும்,

மோகன்சிங்கை தேவகியும், கழிகளினால் பின்புறம் நெருக்கி தள்ளுகிறார்கள்.]

பத்மி. பகதூர்! பாய்ந்து வீசுங்கள்.

படே. (இருந்த இடத்திலிருந்து) தள்ளாதே! பொறு. குறிபார்த்து வாளை வீச முயற்சிக்கின்றேன்.

பத்மி. குறி. சரி. போங்கள் அருகில்.

மோக. படேசிங்! என் அருகினில் மாத்திரம் எங்கே வந்து விடு பார்ப்போம்.

தேவ நெருங்கி வீசுங்கள் வாளை.

மோக. அவன்தான் முதலில் வீசட்டுமே.

பத்மி. வெட்கம்! தாக்குங்கள் முதலில்.

படே. அவன்தான் தாக்கட்டுமே! முதலில்........

[பத்மினியும் தேவகியும், இருவரையும் என்ன நெருக்கியும் மோகன்சிங்கும் படேசிங்கும் பின் வாங்குகிறார்கள். பீம்சிங்கும் ஜயசிங்கும், பிரவேசித்தல்.)

ஜயசி. அட மகாதேவ. இது என்ன கூத்து.

பீம்சி. பத்மினி! இது என்ன காட்சி.

பத்மி. ஐயா! என் தலை எழுத்தை ஏன் கேட்கிறீர்கள். இரண்டு மாதகாலமாக இந்த சூத்தவீரர்கள், என்னை மணக்க விரும்பி, படாத பாடுகளெல்லாம் படுத்துகின்றார்கள். குடும்பத்தில் வீண் குழப்பத்தை உண்டாக்குகிறார்கள். இப்பொழுதும் ஒருவருக்கொருவர் குரவளையைச் சண்டையிடாமல் அரியப்பார்க்கிறார்கள். தயைசெய்து இப்

பெரியார்களுக்குத் தக்க மரியாதை செய்து அனுப்பும்படி வேண்டுகின்றேன்.

பீம்சி. புகழ் நிறைந்த வீரர்காள்! என்ன சமாசாரம். (மோகன் சிங்கும், படேசிங்கும் யுத்தம் செய்ய ஆரம்பிக்கும் நிலமையில், திடீரென கற் சிலைபோல் நிற்கிறார்கள்.)

படே. ஐயா! தயைசெய்து எங்களைச் சமாதானம் செய்து பிரித்து விடாதீர்கள்.

மோக. ஆம் ஐயா! அவ்விதம் செய்தால், எங்கள் இருவாாலும் தங்களுக்கு ஆபத்துக்கூட நேரலாம்.

பீம்சி. அட பாபமே—ஜயசிங் சீக்கிரமாகச் சென்று ஓர் இரண வைத்தியரை அழைத்து வா.

தேவ. ஹ ஹ ஹ, (சிரித்தால்.)

ஜயசி. அட மகாதேவ! (மோகனை நோக்கி) பெரியாரே! கையில் காயத்துடன் நீர் எப்படி நிற்கமுடியும்.

படே. காயமா! (தனக்குள்) என்னை எதிர்ப்பவன் கதி இப்படித்தான் ஆகும்.

மோக. ஐயா! நான் காயமா பட்டிருக்கின்றேன்.

ஜயசி. தடையென்ன—தங்கள் திருமேனியில் அடடா! இங்கே இப்படி முன்னால் வாருங்கள். வெளிச்சத்தில் பார்க்கின்றேன். அட மகாதேவ மாற்பிற்குள் 3 காயங்கள்....ஈம். பிறகு....எங்கே திரும்புங்கள்....ஆ........முதுகுநாம்பில் 5 காயங்கள்....படேசிங் பகதூர் இன்னும் இரண்டு கொடுத்து விடுங்கள். தசாவதாரம் ஆகட்டும். பின்னற் உங்களை ஜாக்கிரதையாகப் பிரித்து விடுகிறோம்.

பீம்சி. ஜயசிங்....இங்குவா.... ( இரகசியமாகப் பேசிவிட்டு ) அவர் தானே இவர்.

ஜயசி. ஆம் அதே வீரர்தான் இவர்.

பீம்சி. படேசிங் பகதூர்! தாங்கள் நமது இராணாவின் பீரங்கிப் படையில்,

படே. ஆம். 5—வருஷங்களுக்கு முன் சேவை செய்திருக்கிறேன்.

பீம்சி. இப்பொழுது, அதை விட்டு வரும்படியான சந்தர்ப்பம் ஏற்பட்ட காரணம்?

படே. யுத்தத்தில் அடிபட்டு விழுந்து விட்டேன். அதனால்....

ஜயசி. ஆம். எதிரியின் பீரங்கியைக் கண்டதும், நடுங்கினார் தடீரென பள்ளத்தில் பாய்ந்தார். பிணம்போல் கிடந்தார். நடு இரவில், கண் விழித்தார். பிணக்குவியில்களின் மத்தியில் இருப்பதை அறிந்தார். மனம் பதறினார். விரைந்து மறைந்தார்.

பீம்சி. அப்படியா—பகதூர். தாங்கள் செய்த சேவைக்கு என்ன கிடைத்ததோ?

படே. நல்ல வருமானம் கிடைத்ததுடன் காயமடைந்ததனால், ஊருக்குத் திரும்பலாம் என்ற உத்திரவும் கிடைத்தது.

பீம்சி. அதனால் திடீரென்று திரும்பிவிட்டீர்களோ.

ஜயசி. ஆம் படீரென்று மறைந்து சடீரென்று ஊருக்குப் பறந்து விட்டார். (யாவரும் சிரித்தால்.)

பீம்சி. தேச சேவையையும் ராஜசேவையையும் மறந்து யுத்தகளத்திலே, புறங்காட்டி ஓடிய நீர், இந்த பட்டப் பகலிலே, வெட்கமில்லாமல் சுதந்தர வீரனைப்போல, உடையணிந்து கையில் வாளேந்தி என்ன தைரியத்துடன் வெளிப்பட்டீர்? சுத்த வீரன் என்றால் நான் அவனைப் புகழ்வேன். கோழைப்பதரே! சுத்த வீரர்களின் புகழ், உம்மைப்

போன்ற பயங்காளிகளின் செய்கைகளினால் இனியும் மாசடைந்து விடுவதை யான் காணமாட்டேன். ஆதலால் இனி வாளைத்தொடக் கூட உமக்கு யோக்கியதை இல்லை (தன் வாளை உருவி) கீழே வையும் வாளை.

படே. பொது நலம் கோரும் வீரரே! தாங்கள் சொல்வது சரியல்ல.

பீம்சி. ( வாளைப் பிடுங்கிக்கொண்டு ) படேசிங்! மறுவார்த்தை பேச வேண்டாம். அடுத்தபடியாக, நான் உமக்குக் கட்டளையிடுவதைக் கவனித்து நடவும். வீட்டை விட்டு வெளியே சென்று, உமது போர் வீரன் உடையை மாற்றிக்கொள்ளும். உமது விகாரமான பார்வையை மாற்றி சாந்தமாக செய்து கொள்ளும். மீண்டும் போர் வீரன் உடையில் உம்மைப் பார்ப்பேனேயாகில் இதே கதிதான் கிடைக்கும் (கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளி விடுகிறான் )

மோக. ஐயா! அந்த வாய்ப்பந்தல் வீரனைத் தக்கபடி தண்டித்ததற்கு என் வந்தனம். இருந்தாலும் நானும் உடனே அவனைப் பின் தொடர்ந்து சரியான பிரம்படி கொடுக்கின்றேன். (போக யத்தனித்தல்.)

பீம்சி. (வழிமறித்து) பெரியாரே ! சற்று நில்லும் உம்மிடமும் ஒருவார்த்தை பேசவேண்டும்.

மோக. ஆ (பயத்துடன்) என்னுடனா. கடவுளே !

பீம்சி. ஆம்! நடுங்காதீர்.

மோக. வயதான என்னை தாங்கள் முரட்டுத்தனமாக நடத்த மாட்டீர்கள் என்று நிச்சயமாய் நம்புகிறேன். நரம்புத் தளர்ச்சியின் காரணமாக, எனக்கு உடலில் அடிக்கடி நடுக்கம் உண்டாகிறது. ஆதலால் சீக்கிரமே என் கிராமத்

திற்குச் சென்று ஓய்வு எடுத்துக்கொள்ள விரும்புகின்றேன். போய் வருகின்றேன். மன்னிக்கவேண்டும்.

பீம்சி. உம்மைப்போன்றவர்களின் நடத்தையினாலேயே வயதான பல உத்தமர்களுக்கும் கெட்டபெயர் உண்டாகிறது. ஜாக்கிரதை. மறுபடியும் நீர் இங்கு காலடி வைப்பீரேயாயின், உமது வயோதிகமும், கௌரவமும், என்னிடமிருந்து உம்மைக் காப்பாற்றாது.

மோக. தங்கள் கருணைக்கு, என் வந்தனம். (தனக்குள்) தப்பித்தேன். இனி மறந்தேன் இவளை.. .... (தும்மிக்கொண்டே செல்லுகிறான். யாவரும் சிரிக்கிறார்கள்.)

பத்மி. காதலா! இத்தகைய வீணர்களிடமிருந்து என்னைக் காத்ததற்கு, நான் தங்களுக்கு என்றும், கடமைப்பட்டவளாக இருக்க இறைவன் அருள்புரிய வேண்டுகிறேன்.

பீம்சி. நன்று! பத்மா உன் கோரிக்கை, ஈடேற வேண்டுமாயின், நமது அரசர் வெற்றிபெற வேண்டும். நம் நாடு சுதந்தரம் பெறவேண்டும். பிறகே நான் உன்னுடன் இனிது வாழ முடியும். ஆ! நான் வந்து வெகு நேரமாகின்றது. ராஜகாரியமாக நானும் ஜயசிங்கும், சீக்கிரமே சென்று குறிப்பிட்ட இடத்தில், ஒருவரை சந்திக்கவேண்டும். உத்திரவு கொடு. சமயம் நேர்ந்தால் பின்னர் வந்து உன்னைக்காண்கின்றேன்.

பத்மி. பிரபோ! தேசத்திற்காகப் போர் புரியும் தங்களை நான் தடை செய்யவில்லை. தங்கள் போர் திறமையை நன்கு வெளிப்படுத்தி யாவரும் மகிழ வெற்றி வீரனாக வர எல்லாம் வல்ல பராசக்தி அன்னை பவானியை பிரார்த்திக்கிறேன்.

ஜயசி. தேவகி! என்றும் நீ சுமங்கலியாய் இருக்கவேண்டும் என்று

நானும் அனுதினமும் தெய்வலோகத்தில் இருக்கும் எனது அருமைத் தெய்வங்களாகிய மாமனாரையும் மாமியாரையும் வேண்டிக்கொள்ளுகிறேன். எனக்கும் உத்திரவு கொடு.

தேவ. இத்தகைய வீரப்புதல்வரைப் பெற்று எனக்களித்த என் மாமனார் மாமியாரை நானும் அனுதினமும் போற்று கின்றேன். போதுமா. வீரக்காதலா! நமது நாட்டினர் தம்மைபோன்ற வீரர்களையே நம்பி இருக்கின்றனர். அவர்களின் ஆசியும், அன்பும் பிரார்த்தனையும் நமது இராணாவினிடத்தே பரிமளிக்கின்றது. பவானிமாதவும் நம்மைக் கைவிடாள். போய் வாருங்கள்.

பீம்சி. வீரப் பெண்மணிகளே! நியாயம் நம் பக்கத்திலிருக்கிறது. எதிரியை விடோம். வெற்றி பெறுவோம். வருகின்றோம். ஜய் பவானி!

[பீம்சிங்கும் ஜயசிங்கும் பாய்ந்து செல்லல் பெண்கள் இருவரும், பவானியை வணங்கிப் பாடுகிறார்கள்.]

[பத்தாவது களம் முடிகிறது.]

## களம் 11.

**இடம் :—** **தோடர்மாலின்** *யுத்த சபை.*

**காலம் :—** *காலை.*

நடர் :— இராஜா தோடர்மால், சபக்டஜின், ஜயசந்திரன், அப்துல் காபர்கான், இராணு ரகுபதிசிங், தளகர்த்தர்கள், வீரர்கள் முதலானோர்.

[**தோடர்மால்** *ஓர் உயர்ந்த ஆசனத்தில் அமர்ந்திருக்கின்றான். இரு பக்கங்களிலும் சில வீரர்கள் உருவிய வாட்களுடன் நிற்கின்றார்கள்.* **சபக்டஜின், ஜயசந்திரன்** *மற்றும் சில தளகர்த்தர்கள் முறையே அமர்ந்திருக்கிறார்கள்.* ]

தோட. கொண்டு வாருங்கள் அவனை (**அப்துல் காபர்கானை,** *இரு வீரர்கள் தக்கக் காவலுடன் அழைத்து வருகிறார்கள். ஓர் முகம்மதிய சாதுவைப்போல்* **இராணு ரகுபதிசிங்,** *கானைப் பின் தொடர்ந்து சபையில் ஓர் புறம் நிற்கின்றான்.*) யுத்த சபை அங்கத்தினர்களே! தளகர்த்தர்களே! வீரர்களே! நமது அரசாங்கத்திற்கு அப்துல் காபர்கான் செய்த துரோகமானது மன்னிக்க முடியாத பெருங் குற்றமாகும். எவனைப் பிடிக்க வேண்டுமென்று நாம் இதுவரை கஷ்டப்பட்டு வருகின்றோமோ, அவனே நேராக எதிரினில் வந்தும், அவனைக் கைது செய்யாது உறவாடி, அவனைத் தப்பிச் செல்லும்படி இவன் உதவி செய்தான் என்றால்

இதைவிட இராஜத் துரோகம் வேறு என்ன வேண்டும். ஆகவே இன்று இங்கு கூடியிருக்கும் யுத்த சபை அங்கத்தினர்கள், இவ்விஷயத்தை நன்கு பரிசீலனை செய்ய வேண்டுகின்றேன். காபர்கான்! இது விஷயமாக ஏதாவது கூற விரும்பினுல் நீ கூறலாம்.

அப்து. சகோதரர்களே! தலைவர் கூறியது யாவும் உண்மை. பிரசித்தி பெற்ற இராணு ரகுபதி சிங்கின் மேன்மையையும், உள்ளத் தூய்மையையும், நான் கண்டு இரக்கங் கொண்டு, என்னையும் மறந்து விடுத்தனன்....அப்படிச் செய்தது........

சபக். இராஜத் துரோகமல்லவா.

அப்து. ஆம். ஆயினும் பிரபோ! இராஜத் துரோகம் வேண்டுமென்று செய்யவில்லை. ஓர் ஹிந்து சகோதரர், ஓர் இராஜ புத்திர வீரன், வருந்துவதைக் கண்டு என் மனம் உருகியபடியினுல் இரக்கம் என்னைத் தன் அடிமையாக்கியது. சத்தியமே அவதாரமாக என் முன்னே நின்று தன்னைக் கைது செய்யவேண்டிய அந்தத் தருமாத்மாவுக்கு நான் கருணை காட்டாமலிருக்க முடியவில்லை. என் செய்வேன். என்னையும் மறந்தேன். தலைவரின் கட்டளையை மீறினேன். மனமுடைந்து, இறப்பதற்குச் சித்தமாக என் முன் வந்த ரகுபதிசிங்கை விடுத்தேன். அது பெருங் குற்றம் என்பதையும், அதற்காகத் தாங்கள், எனக்குத் தக்க தண்டனை விதிப்பது நியாயமும், நீதியுமாகும் என்பதையும் நான் இதுபோது நன்கு உணர்கின்றேன். இனித் தங்கள் சித்தம்போல் நடக்கக் காத்திருக்கின்றேன்.

தோட. நன்று! பிரதிநிதிகளே! தங்களுடைய அபிப்பிராயங்களைக் கூற இரகசிய அறைக்கு வர வேண்டுகின்றேன். (தோடர் மாலுடன், சபக்டஜின், ஜயசந்திரன், மற்ற இரு தளகர்த்தர்களும் உள்ளே செல்லுகிறுர்கள். இது போது மாறு வேடத்

துடன் அங்கு நின்ற ரகுபதிசிங் கானே மெல்ல நெருங்குகின்ருன். )

இரகு. ஐயா ! தம்முடைய நிலமை உண்மையில் என் மனத்தை வருத்துகின்றது. என் செய்வேன்.

அப்து. பெரியவரோ ! ஆண்டவன் செயலே யார் அறிவார். யாவும் அவரவர்கள் செய்த வினையின்படியே நடக்கும். என் பொருட்டுத் தாங்கள் வருந்துவது உண்மையில் எனக்கே மனம் தாளவில்லை. சாந்தி யடையுங்கள்.

இரகு. தங்கள் உயிரைவிட அந்த இராணுவின் உயிரைப் பெரிதாக மதித்ததினுலன்ருே தங்களுக்கு இந்தக் கஷ்டம் வந்தது.

அப்து. பக்கிரோகிய தங்களிடமிருந்து இவ்வார்த்தைகளை நான் எதிர்பார்க்கவில்லை. சத்காரியத்திற்காக உயிரையும் தியாகம் செய்யலாம் என்பதைத் தாங்கள் அறியாதவர்கள் இல்லையே.

இரகு. ஆம் ! அறிந்தேன் ! அறிந்தேன் ! வீரரே....ஆ அதோ அவர்கள் வருகிருர்கள். (இராஜாதோடர்மால் முதலியோர் திரும்பிவந்து தங்கள் தங்கள் ஆசனத்தில் அமருகிருர்கள்.)

தோட. சபையோர்களே! அப்துல் காபர்கான், இராணு ரகுபதி சிங்கைக் கைது செய்யாமல் தப்ப உதவி செய்தது இராஜத் துரோகமாகும். எனவே நமது யுத்த சபையின் உத்தரவுப்படி அவனுக்கு மாண தண்டனை விதிக்கின்றேன்.

அப்து. அல்லா ! (தலை வணங்குகின்ருன்.)

இரகு. (தனக்குள்) ஆ! பவானிமாதா!

தோட. அழைத்துச் செல்லுங்கள் இவனே. (காவலர்கள் கானே அழைக்க முன் வருகிருர்கள். பக்கிரி வேஷத்துடன் முன்

நின்ற ரகுபதி சிங், தன் வேஷத்தைக் கலைக்கின்றான்.)

இரகு. நில்லுங்கள்! அந்த மகாத்மாவை விடுங்கள்! இராஜா தோடர்மால்! இதோ, நீங்கள் தேடும் இராணு ரகுபதிசிங். கைதியாக்கி, உங்கள் இஷ்டபடிக் கொல்லுங்கள். நிரபராதியான, குற்றமற்ற, அந்த முகம்மதிய சகோதரரைச் சந்தோஷத்துடன் விடுதலை செய்யுங்கள். அக் கருணைத் தியாகி, என் பொருட்டு உயிர்விட, நான் ஒருக்காலும் விடேன். (காபர்கானைப் பாய்ந்து தழுவி) கான் சாஹிப்! இந்த இராணு ரகுபதிசிங் தன் கடமையை ஒரு போதும் மறக்க மாட்டான்.

அப்து. பர்வர்திகார்! ரகுபதிசிங்!! என்ன தவறு செய்தீர்கள்! மறுபடியுமா இங்கு....

தோட. கொள்ளைக்காரனே! அகப்பட்டனையா நீயும். சபக்டஜின்! அகப்பட்டான் இரகுபதிசிங்........கட்டுங்கள் அவனை. (இராணுவை வீரர்கள் கைது செய்கிறார்கள்.) இவர்களைச் சிறைச்சாலைக்குக் கொண்டு செல்லுங்கள். நமது அரசர் பெருமான் உத்திரவு வந்ததும் இவர்களுடைய சிரங்கள், மண்ணில் நமது சைன்யத்தின் முன் உருளட்டும்.

சபக்டஜின் :—அக்பர் சக்ரவர்த்தி.

யாவரும் :—வாழ்க!

இரகு. காபர்கான் கருணை காட்டினர். அப்பெரும் தியாகிக்கு மரணம் கொடுத்தான் தோடர்மால்........என்னே மானிடனின் நீதி....கருணைக்கு, மரண தண்டனையா! ஏகலிங்கா! பவானி மாதா!........ (விலங்குடன் உட் செல்லுகின்றான்.)

அப்து. வருகவெல்லாம் வருக. ஆண்டவனே! இதுவும் நின் திருவிளையாடல் (செல்லல்.)

[பதினொன்றாம் களம் முடிகிறது.]

## களம் 12.

இடம் :— அரவல்லி மலைச்சாரல்.

காலம் :— இரவு.

நடர் :— பிரதாபசிம்ஹன், பீம்சிங், ஜயசிங்.

[ பிரதாபசிம்ஹன் கோபத்துடன் உலாவுகின்ருன். எதிரில் மரியாதையுடன் ஜயசிங்கும், பீம்சிங்கும், நிற்கிருர்கள். ]

பிரதா. காபர்கானுக்கு இருக்கும் கருணை, அந்தக் குலத்துரோகி தோடர்மாலுக்குச் சிறிதும் இல்லையே—சண்டாளன்! ஆ பீம்சிங். இனி என் செய்வோம்.

பீம்சி. மோசம்! மோசம்!! நமது அரசர் வேண்டுமென்றே மரணத்தைத் தேடிக்கொண்டார். இனித் தோடர்மால் அவரைக் கொல்லாமல் விடப் போவதில்லை,

பிரதா. நினைத்தேன். ஆயினும் நமது தலைவரைக் காக்க வேறு வழியில்லையா?

பீம்சி. அது அசாத்தியமான காரியம். அவரைப் பலமான காவலில் வைத்திருக்கிருர்கள்.

பிரதா. ஐயோ! இதென்ன அநியாயம். ஏகலிங்கா! இதுவோ நின் செயல். பிரதாப்! குலத் துரோகியாகிய தோடர் மாலுக்கு இவ்வளவு தைரியம் எப்படி வந்தது?

ஜயசி. எல்லா வற்றிற்கும் காரணம் அக்பர்தான்.

பிரதா. அக்பர்! அக்பர்!! ஆம், அக்பரால்தான் நமது வம்சத்திற்கு இவ்வளவு கஷ்டங்கள் நேரிடுகின்றன. இருக்கட்டும் பீம்சிங்! நமது இராணாவைத் தோடர்மால் கொலை செய்யப் போவது உண்மைதானா?

ஜயசி. ஆம். அக்பரின் உத்தரவு வந்ததும் கானும், இராணாவும் கொல்லப்படுவார்கள். அதில் சிறிதும் சந்தேகமில்லை.

பிரதா. நன்று! கொலை செய்ய உத்திரவு கொடுப்பதற்கு முன்னர் அந்த அக்பரின் உயிரை யானே கொன்று உடனே திரும்புகிறேன். பின்னர் அந்த இராஜா தோடர்மாலையும் எதிர்த்து நம் இராணாவைக் காப்போம். இல்லையேல்....

பீம்சி. அமர்க்களத்தில் ஆவி நீக்குவோம்.

பிரதா. சபாஷ்! நன்று கூறினை. என் கருத்தை நன்கே அறிந்தனை. பீம்சிங்! நான் வருமளவும் நமது சேனைகளைக் கவனித்துக் கொள். வெகு சீக்கிரமே என் காரியத்தை முடித்துத் திரும்புகிறேன். கடவுள், மன்னன் தாய்நாடு, இவர்களுக்கே எனது வாழ்க்கை. (வாளை உருவி) ஜய் பவானிமாதா—(பாய்ந்து மறைகிறான். பீம்சிங்கும் ஜயசிங்கும் அவன் மறைந்த திக்கைப்பார்த்து ஈசனை வணங்கி பிரார்த்திகின்றார்கள்.)

[பன்னிரண்டாம் களம் முடிகிறது.]

## களம் 13

இடம் :— அக்பரின் அரண்மனைத்தோட்டம்.

காலம் :— முன்னிரவு.

நடர் :— நாராயணநாயர், காதர், அக்பர், பிரதாபஸிம்ஹன், ஜோதிபாய், அபுல் பசல்.

[ தோட்டத்தில் இரத்தின கம்பளம் விரிக்கப்பெற்றிருக்கிறது. நடுவில் சில அழகிய ஆசனங்கள் காணப்படுகின்றன. நாராயண நாயர் மூச்சுத்திணற ஓடி வந்து சுற்றிப்பார்க்கின்றான். ]

நாரா. பாதுஷாவும் ஆயாளுடே பார்யாவும் வருன்ன சமயம் ஆயல்லோ. எந்து செய்யாம் ( ஓரிடத்தை கவனித்து. ) ஏ காதர்! காதர்! இவ்விடே எளுப்பம் வா. ( காதர் ஓடி வருகிறான். )

காதர். நாயர்! கியா சமாசார்?

நாரா. ஐயோ. ஈ தோட்டத்தின்டே அகத்தே, என்டே ஆக்ஞா இல்லாதே ஒரு மான் வன்னலல்லோ.

காதர். ஹா. நாயர்! ஹம் ஓடி உஸே பிடிக்கிறான் ஜல்தி, ஜல்தி. ஆவ்.

[ இருவரும் ஓடுகிறார்கள். சிறிது நேரத்திற்குப் பின் ஓர் ஹிந்து சாதுவைப் போல் வேடமணிந்த பிரதாபஸிம்ஹன் ஒருவருமறியா வண்ணம் மெல்லப் பிரவேசிக்கின்றான். ]

பிரதா. இதுவரை நம்மை எவனும் கவனிக்கவில்லை—ரஜபுத்ரனுக்கு துன்பமிழைக்கும் ஏ அக்பர் மன்னனே! இன்றோடு நீ தொலைந்தாய்....ஆ அதோ யாரோ இப் பக்கம் ஓடி வருகிறார்கள். என் செய்வேன்! ஜய் பவானி! (பிரமித்து ஜமக்காளத்தின் அடியில் நுழைகிறான். நாயரும், காதரும் ஓடி வருகிறார்கள்.)

காதர். நாயர் வஹ் மான் இதர் வந்தான். நாம் பார்த்தான்.

நாயர். அஞ்ஞன யாணோ? ஞான் கண்டில்லல்லோ! அது கொச்சு மானோ இல்லங்கில் வலியமானோ எந்தா பா.

காதர். அச்சா சோட்டாமான், நாயர் கள்ளம் நை.

நாயர். (ஜமக்காளத்தின் நடுவே மேடிட்டுருப்பதையும் அது அசைவதையுங்கண்டு பயந்து) காதர்! ஆ ஜமக்காளத்தின்டே அகத்தே எந்தா நோக்கு.

காதர். (பயந்து) அது கியா ஹை? நம்கு ரொம்ப பயமாயிருக்கிறான். (பயப்படுதல்)

நாயர். காதர்! அது பிசாசோ இல்லங்கில் கள்ளனோ. அறிஞ்சுகூட. இனி நாம் மரிச்சுபோகும்.

காதர். மரிச்சுபோகும். நை. நை. தூ இவ்விடே நிற்கிறான். மை ஜாகர் சிப்பாய்களை அழைத்து இதர் வர்ரான் (செல்ல எத்தனித்தல்.)

நாயர். இ காரியத்தினே நீ போகண்டா. ஞானே போயச்சு சிப்பாய்களை விளிச்சுக்கொண்டு வராம். நீ இவ்விடேயிரு.

காதர். நை. நை, நாம் இருவரும் ஓட்ராம்—கழி எடுத்து வாரும். அடிக்கிறும். கியா தும் போலோ?

நாயர். நம்மளே போலே புத்திசாலி வேறே யாருமில்லா. நீ பறையுன்னது வளர சரியான. இனி நம்ப இரண்டு பேருக்கும் பேடியில்லே. ஓடுவோமா.

காதர். தூமாரா போச்னே அச்சா டெக் ஹை (இருவரும் இருபக்கங்களிலும் பிரிந்து ஓடுகிறார்கள்.

பிரதா. (சீக்கிரமே வெளிவந்து) அருமையான காவலர்கள்—நல்ல வேளை மறு முறையும் தப்பினோம். இதுவும் ஓர் நற்சகுனந்தான்—இனி எங்கு மறையலாம். (மேலே பார்த்து) இந்தக் கல்லாசனத்திற்கு மேல் உள்ள ஆல விருக்ஷமே நமக்குச் சரி (பாய்ந்து மேலே ஏறி ஒளிந்து கொள்ளுகிறான்—சிறிது நேரம் கழித்து நாயர் கழியுடன் பிரவேசித்து மேடிட்ட இடத்தைக் காணாது.)

நாயர். ஓ எவ்விடே! அ மேடு ஒன்றையும் கண்டிலல்லோ. பிசாசாகத் தன்னே இரிக்கணும். மலேயாள பகவதியின்டே உதவியினேக்கொண்டு நாம் இதைக் கண்டு பிடிக்காம். மலேயாளபகவதி! ஓ மலேயாள பகவதி எளுப்பம் ஓடியா. சல். சல். (திடீரென உடைவாளை உருவிக்கொண்டு ஜமக்காளத்தின் அடியில் பாய்கிறான். காதர் கழியுடன் பிரவேசித்தல்.)

காதர். அச்சாஹை. ஒரே மார்ஸே தலையை உடச்சுட்டான் (ஜமக்காளத்தின் கீழ் இருக்கும் நாயரை அடித்தல்.)

நாயர். ஐயோ. பிசாசு அடிக்கின்னு. ஓ காதர்! ஓடியா

காதர். ஹரேரே. நாயர்க்கு நாம் திருடன் என நினேச்சான். மை அடிச்சான். கியா கருங்கா. நாயர்! தூ மர்க்கயா ஹை.

நாயர். (வெளிவந்து கொண்டே) இல்லா. இல்லா. ஏ காதர்! ஈ ஜமக்களத்தின்டே அகத்தே இருன்ன பிசாசு மேலே

வன்னு என்னை அடிச்சு. நின்னையும் அடிக்கும். அது கொண்ட நம்ப இவ்விடேயிருன்னு ஓடிப்போவாம்.'

காதர். நாயர் சமாசார் மாலும் நை. தும்கோ கள்ளன் என நாம்பள் நினைச்சு உனக்கு அடிச்சான். கோபம் நை மாப் கரோ. சலாம். சலாம்.

நாயர். அடே கள்ள. நின்டே வேலையை ஈ மலையாளத்தான் அண்டே காணிக்கான் வன்னோ. என்னைக் கள்ளன் யென்னோ நீ பறஞ்ஞு. நீதன்னே கள்ளன். இப்போ நோக்கிக்கோ— (கழியை ஓங்குகிறுன்.)

காதர். அரே நாயர் சாந்திஸே ஹை....மார் நை. (அக்பர் வருவதை அறிந்து)—ஆ! உதர்! தேகோ நாயர்! நம்பள்கி பாதுஷா ஆதே ஹை. (விரைப்பாக நின்று) பாரா உஷார்.

நாயர். (கழியை எறிந்து, பயத்துடன் விரைப்பாக நின்று) ஆம். நிஜமாண காதர் நம்பளுடைய வழக்கினெ பின்னீடு நோக்கிக் கொள்ளாம். பாரா உஷார்.

[அக்பர் பிரவேசிக்கிறுர். இருவரும் தரையை மூன்று முறை வணங்கி, பின்னுலேயே நகர்ந்து மறைகிறுர்கள் அக்பர் களைப்புடன் கல்லாசனத்தில் அமர்ந்து யோசிக்கின்றுர்.]

அக்பர். வீரஸிம்மமாக விளங்கும் இரகுபதிசிங்கை எப்படி நம் பக்கலில் சேர்ப்பது. அவன் அரண்மனையை மாத்திரம் பிடித்தென்னப் பயன். அவன் மனக்கோட்டையை அன்றே பிடிக்கவேண்டும். அவ்விதம் செய்வேணுயின் அவனையும் அவனுடன் ஒன்றுபட்டு வாழும் பல இரஜ புத்திர சிம்மங்களின் அபிமானத்தையும் ஒற்றுமையையும் அடைவேன். அந் நாள், எந் நாள் வருமோ தெரியேன்.

என்ன செய்வது? எதற்கும் ஆண்டவன் அருள்வேண்டும்.
(ஜோதிபாய் பிரவேசம்.)

ஜோதி. மகாராஜ்! நமஸ்காரம்.

அக்பர். பிரியே ! வா, உட்கார்.

ஜோதி. (அருகில் அமர்ந்து) மகாராஜ் ஏதோ யோசனையிலிருப்பதாகத் தெரிகிறதே. அதனை நான் அறிவதனால் குற்றமில்லையே.

அக்ப. கண்ணே! அந்த இராணு ரகுபதி சிங்கைப் பற்றிதான் யோசனை.

ஜோதி. இராணுவைப்பற்றி யோசிக்கும் பொழுதெல்லாம் என்னை மறக்கத்தானே செய்கிறீர்கள்.

அக்பர். அன்பே! உன்னை மாத்திரமல்ல, உண்மையில் என்னையும் மறந்து விடுகின்றேன். அது பிழையாயின் பொறுத்துக் கொள்.

ஜோதி. மன்னிக்கவேண்டும். பிரபோ! தங்கள் மனத்திற்கு எப்பொழுதும் கவலையைத் தரும் அந்த ஒப்பற்ற இராஜ புத்திரத் தலைவனைத் தாங்கள் ஏன் தங்கள் பக்கம் சேர்த்துக் கொண்டு, மன அமைதி யடையலாகாது?

அக்பர். பலவித உபாயங்களினலும் அவனை வசப்படுத்த முயன்றேன். செய்து என்ன பயன்? அவன் என்னுடன் நட்புக்கொள்ள விரும்பவில்லை.

ஜோதி. இராஜபுத்திர வம்சத்தில் தோன்றிய என் தந்தையை வசப்படுத்தி, என்னையும் மணம் புரிந்த தங்களுக்கு, இரகுபதி சிங்கை வசப்படுத்துவதுதானு கஷ்டம்.

அக்பர். ஆம், அவன் குணத்தை நீ அறியாய். 'குலப்பெருமையை விடுவதா? அக்பருக்கு அடங்குவதா? சுதந்திரத்தை விடுவதா எனச் ஸௌரியம் பேசும் அந்த இரகுபதிசிங். உன் தந்தையைவிட அதிக ரோசமுள்ளவனாக விளங்குகின்றான். இந் நிலையில், அவனை எப்படி வசப் படுத்துவது. நீயே சொல். அப்படியே செய்கின்றேன்.

ஜோதி. எப்படியாவது இராணாவைச் சந்தித்து, அவருடன் ஒன்றுப்பட்டு, கௌரவமாக நடத்துவதே தங்களுக்குப் பெருமை யளிக்கும். இதுவே அடியாளின் எண்ணம்.

அக்பர். கிளியே! மெச்சினேன் உன் உதார குணத்தை, உன் இஷ்டப்படி நடக்க, ஆண்டவன் அருள் புரிவாராக.

[ இது சமயம், மேலே மறைந்திருக்கும் **பிரதாபசிம்மனின்** உடைவாள் தவறிக் கீழே விழுகிறது. அதைக் கண்ட **அக்பர்** திடீரென எழுந்து அதைக் கரத்தில் எடுத்து மேலே பார்க்க, **பிரதாப்**, கீழே குதித்து **அக்பரை** வணங்குகின்றான். ]

ஜோதி. ஐயோ! ஜாக்கிரதை.

அக்பர். பயப்படாதே! துஷ்டனே! நீ யார்? சீக்கிரம் சொல்.

பிரதா. மகாராஜ்! நான் ஓர் உத்தம க்ஷத்ரியன். இராணா ரகுபதி சிங்கின் ஓர் சிறு தளகர்த்தன் தங்களால், எங்களுக்கு ஏற்பட்டு வரும் கஷ்டங்களைக் கண்டு மனம் பதறியவனாய்த் தங்களைக் கொன்றுவிட எண்ணி, இங்கு தந்திரமாக வந்து மறைந்தேன். எங்கள் இராணாவின் மீது, தாங்களும் தங்களுடைய நன் மனைவியாரும் கொண்டுள்ள உதார குணத்தையும், நன்மதிப்பையும் நன்கு அறிந்தேன். என் குற்றத்தை யுணர்ந்தேன். பிரபோ! உத்தமராகிய தங்களுக்குத் தீங்கிழைக்க வந்த இப் பாபியை, சீக்கிரமே

சொல்லும். அப்பொழுதுதான் என் ஆத்மா திருப்தி யடையும்.

அக்பர். அப்படியா? சிப்பாய்! (காதநும், நாயநும், ஓடிவந்து வணங்கல்.) இவனைக் கைது செய்து சிறையிலிடுங்கள்.

பிரதா. கொலைகாரனையா சிறையிடுவது! என்னே இவர் நீதி! என்னைச் சித்திரவதை செய்யினும் பாபமில்லையே.

அக்பர். ஆம்! மோச வேஷத்தினில், என் அந்தப்புறத்திற்கே தைரியமாய் வந்த உன்னைச் சித்திரவதை செய்வதில் தவறு ஒன்று மில்லை. நன்று, இப்பொழுது உன் தலைவன் எங்கே இருக்கின்றான். உண்மையைச் சொல்.

பிரதா. தோடர்மாலினால் கைது செய்யப்பட்டு, சிறையில் வைக்கப் பெற்றிருக்கிறார்.

அக்பர். ஆ! அகப்பட்டானா! பேஷ் இராஜா தோடர்மால்! நீயே தீரன்! உன் நன்றியை நான் மறவேன்.

ஜோதி. பாதுஷா! புஜபல பராக்கிரமத்தினால் எங்கள் இராணாவைத் தோடர்மால் பிடித்துவிட்டதாகத் தாங்கள் சந்தோஷம் கொள்ளவேண்டாம். அவர் பிடிப்பதற்குக் காரணம், தங்கள் சைன்யத்திலுள்ள "கருணைத் தியாகியாகிய" அப்துல் காபர்கானே யாவர்.

அக்பர். காபர்கான்....காபர்கான்....(அபுல்பசல் ஓர் கடிதத்துடன் ஓடி வருகிறார்.)

அபுல். ஆ! இதென்ன.

அக்பர். பொறுங்கள் சொல்லுகின்றேன்.

அபுல். சர்க்கார்! இரகுபதிசிங் பிடிப்பட்டான். பகதூர் தோடர் மால் கீர்த்திபெற்றார்.

அக்பர். யாவும் நான் அறிந்தேன். பசல்ஜி! இக்கைதியை சிறை யிட்டவுடன் தோடர்மாலின் கடிதத்துடன் என்னை தனிமையாக உடனே சந்திக்கவும். (யாவரும் அக்பரை வணங்கி, கைதியை அழைத்துச் செல்லுகிறார்கள்.) தருமம் தலைகாக்கும். நான் உயிர் வாழவேண்டும் என்பது கடவுளின் கட்டளை போலும்!

ஜோதி. (மறைவிடமிருந்து வெளி வருகிறாள்) ஆம் நாதா! நீங்கள் வெகு நாள் வாழவேண்டும்.

அக்பர். பிரேமா! பிரதாபசிம்மனின் வஞ்சனையைப் பார்த்தனையா.

ஜோதி. ஆம் சர்க்கார். தங்கள் உண்மை மன நிலையை அறிந்த வுடன், தன் உயிரைத் துரும்பாக மதித்த அந்த உண்மை இராஜபுத்திரனின் மேன்மையையும் சீலத்தையும் கவனித் தீர்கள் அல்லவா?

அக்பர். சீலம்-மேன்மை-ஆம். அவன் மேன்மை யானவன்தான். ஜோதி! இனம் இனத்தோடு சேருவது இயற்கைதானே பிறகு........

ஜோதி. நாதா! இராணு இரகுபதிசிங்கின், முடிவு யாதோ தெரிவிக்க வேண்டுகின்றேன்.

அக்பர். முடிவை அறிய வேண்டுமா கண்ணே! நாளைக் காலையில் அவன் சிரம் இரத்த வெள்ளத்தில் புரளும்.

ஜோதி. கொலையா! ஏகலிங்கா! பவானிமாதா! கருணை! இரக்கம் பாதுஷா! இரக்கம் [மூர்ச்சித்து கீழே சாய, அக்பர் அவளைத் தாங்கிப் படுக்கையில் கிடத்தி அருகில் அமர்ந்து, அவளைக் கூர்ந்து கவனித்துக் கடவுளைத் தொழுகிறார்.)

[பதின்மூன்றும் களம் முடிகிறது.]

## களம் 14.

இடம் :— கோலைக்களம்.

காலம் :— காலை.

நடர் :— இராஜா தோடர்மால், ஸபக்டஜீன், ஜயசந்திரன், அப்துல் காபர்கான், இராணு ரகுபதிசிங், அக்பர், அபுல்பசல், தான்ஷேன், போர் வீரர்கள், கொலையாளிகள் முதலானோர்.

[தோடர்மாலின் போர் வீரர்கள் இரு புறங்களிலும், அணிவகுத்து நிற்கின்றனர். உருவிய வாட்களுடன் நிற்கும் இரு கொலையாளிகளின் இடையே இராணுவும், காபர்கானும், அஞ்சாது நிற்கின்றார்கள். அருகில் ஸ்பக்டஜீன் தோடர்மாலின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றான். கான் அடிக்கடி மௌனமாக ஆண்டவனை வணங்குகின்றான்...தோடர்மால் பிரவேசிக்கின்றான். இரகுபதிசிங் நீங்கலாக மற்ற யாவரும் அவனுக்கு வணக்கம் செய்ய, தோடர்மால் பிரதி வந்தனம் செய்து கைதிகளை அணுகி நிற்கின்றான்.]

தோட. வீரர்களே! இங்கு நிற்கும் இரு கைதிகளையும், அவர்களால் நமது அரசர் பெருமானுக்கும் நமக்கும் ஏற்பட்ட பெருந் துன்பங்களையும் தாங்கள் நன்கறிவீர்கள். (காபர்கானை நோக்கி) இதோ நிற்கும் அப்துல் காபர்கான் பெரும் இராஜத் துரோகி, உண்ட வீட்டிற்கு இரண்டகம் செய்த கள்வன். நிலை தவறி, கடமையை மறந்தவன். அக்பர் பாதுஷாவிற்கும் நாட்டின் நலத்திற்கும் பங்கம் அளித்த வஞ்சகன். இவனைப் போன்ற கோழை வீரர்களைக்கண்ட துண்டமாகச் செய்திடினும் பாபமில்லை.

இரா. தோடர்மால்! இரக்கமுள்ள வீரனும், பெரும் தியாகியு மாகிய எனது அன்பரை மறுமுறை அவ்விதம் கூருதே. பராசக்தி பவானி மாதாவின் அருளை இழப்பாய்.

தோட. இரகுபதிசிங்! நிறுத்து உன் பேச்சை. வீர சகோதரர் களே! இவனை எவ்வளவோ முறை எதிர்த்தும் உயிர் தப்பினான். நமது அக்பர் மகானையும் தூஷித்தனன். இவனால் நாம் பட்ட கஷ்ட நஷ்டங்களை ஈசனே அறிவார். ஆகவே, இந்தப் பிரஷ்டனால் இனி ஒருவித இடையூறும் வாரதிருக்குமாறு யுத்த சபையார், இவனுக்கு மரண தண்டனை அளித்துள்ளார்கள். இரகுபதிசிங்! நீ ஏதாவது தெரிவிக்க விரும்பினால், கடைசி முறையாகக் கூறலாம்.

இரகு. (காபர்கானைத் தழுவி) சுயநலமற்ற பொதுநல வீரனே! என்னை க்ஷமித்து, உத்தரவு தர வேண்டுகின்றேன்.

காபர். சொன்ன சொல்லை காக்கத் தன் உயிரையும் அளிக்க வந்த தயாபரனே! இவ்வித முடிவை ஆண்டவன் அளிப் பார் என்று நான் எண்ணவில்லை. சரி, அவர் அருள்படியே நாம் சீக்கிரமே அவரை அடைவோம். (இராணாவைத் தழுவிய பின்) பஹதூர்! ஓர் வேண்டுகோள்.

தோட. சீக்கிரமே கேள்.

காபர். தலைவரே! இரகுபதிசிங் இறப்பதற்கு முன், என் தலையை வெட்ட உத்தரவு வேண்டுகின்றேன்.

இரகு. அது கூடாது. காபர்கானின் தலை சாய்வதற்கு யானே காரணமாதலின், என் தலைதான் முதலில் வெட்டப்பட வேண்டும். அதுவே முறை. ஜய் பவானிமாதா! (தலைவணங்கிக் கீழே அமருகின்றான்.)

அப்து. இல்லை! நான்தான் முதலில் இறக்கவேண்டும். அல்லாஹூ! (தலை வணங்கிக் கீழே அமருகின்றான்.)

தோட. (தன்னை மறந்தவனாய்) பவானிமாதா!........அல்லாஹூ! ஒன்றும் புரியவில்லையே!....

(அபுல்பசல், தான்ஷன், வீரர்கள் முதலியோர் தொடர அக்பர் பிரவேசிக்கின்றார். வீரர்கள் யாவரும் 'பாதுஷா! பாதுஷா! எனக்கூவி வணங்குகிறார்கள்.)

அக்பர். பகதூர் தோடர்மால்! தமது கடிதங் கண்டேன். இராஜ விசுவாசத்துடன் நீர் நடந்து கொண்ட நேர்மையை நான் போற்றுகின்றேன். காபர்கான்! வீரமுள்ள இராணுவின் துன்பம் துடைக்க, நீ முன் வந்தது எனக்கு மிகவும் பெருமையை அளிக்கின்றது. தோடர்மால்! இவனை மன்னித்தேன். ஏற்றுக்கொள்ளும்.

தோட. உத்திரவு.

அப்து. அல்லாஹூ! (வணங்கல்)

அக்பர். இரகுபதிசிங்! கொடுத்த வாக்கைக் காப்பாற்ற ஓர் இராஜ புத்திரன் தன் உயிரையும் மதியான் என்பதை இன்று நன்கு உணர்ந்தேன். எனது வீரன் காபர்கானைக் காக்க அஞ்சாது வந்த உமது அருஞ்செயலை யான் என் உள்ளத்தில் கொண்டேன். மனதில் மிகவும் குஷி யடைந்தேன். இரகுபதிசிங்! தம்மாலும், பிரதாபசிம்மன் போன்ற தம்முடைய வீரர்களாலும் எனக்கு இதுவரை நேர்ந்த இடையூறுகள் யாவையும் மறந்தேன். உம்மையும் அவர்களையும் சந்தோஷமாக இன்றுமுதல் விடுதலை செய்தேன்.

இரகு. மகாவீரன் யென்றால் நீர்தான். பாதுஷா! காப்பவன் அரசனாவானேயன்றி ஆள்பவன் அரசனாகான். ஒப்பற்ற வீரரே! வாள்கொண்டு எதிர்ப்பினும் பணியாத இந்த இராணு இரகுபதிசிங்கை அன்பான வார்த்தையினாலும், பெருந்தன்மையான செயலினாலும் வென்று விட்டீர்கள்

எனவே, என் வாழ்நாள் முழுதும் நான் தங்களுக்கு நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன். (வணங்குகிறான். அக்பர் அவனைத் தழுவுகிறார்.)

அக்ப. நண்பரே! உமது மனக்கோட்டையில் சந்தோஷத்துடன் வசிக்க எனக்கு இடமளித்தீர். ஆகவே நீர் உமது கோட்டையை மீண்டும் பெற்றுக்கொண்டு, உமது மனைவி, மக்கள், சுற்றம் சூழ, சுகமேவாழ்ந்து நம்மிடம் என்றும் நன்றியுள்ளவராக இருக்க வேண்டுகின்றேன்.

இரகு அக்பர் மகா சக்ரவர்த்தியே! பெருமை யடைந்தேன். உண்மை வீரனையும், அவன் செயல்களையும் கண்டு தக்கபடி கௌரவிக்கும் உதாரகுண வீரரே! இரகுபதிசிங் உலகில் உள்ளளவும் அக்பருக்கு விரோதமாக அவனும் அவனது வீரர்களும் இனி வாளை உருவமாட்டார்கள். இது சத்தியம்.

அக்பர். சபாஷ்! இரகுபதிசிங்! மெச்சினேன். நம்பினேன் உமது வார்த்தைகளை. என் மனைவியின் விருப்பம் இன்றே ஆண்டவன் அருளினால் கை கூடியது. எல்லாம் தெய்வச்செயல்.

இரகு. சந்தோஷம். அக்பர் மகாராஜ்கி! (யாவரும் ஜய்!)

அக்ப. இராணு ரகுபதி சிம்ஹத்திற்கு! (யாவரும் ஜய்!)

இரகு. ஆரிய மாதவுக்கு (யாவரும் ஜய்!)...யாவரும் பாரத மாதாவைப் புகழ்ந்து பாடுகிறார்கள். பாரத மாதா ஓர் புறம் சந்தோஷத்துடன் காட்சியளிக்கின்றாள்.

— மங்களம் போங்குக. —

# RANA RAGHUPATI SINGH

## AKBAR'S tribute to his bravery

— BY —

**Mr. C. N. ZUTSHI, M.R.A.S. (Lon.).**



The stirring story of how the bravery and truthfulness of RANA RAGHUPATI SINGH, A Rajput prince, were rewarded by Emperor AKBAR, is related in the article below. A king who could not be conquered by the sword was won over to the Emperor's side by the latter's kindness to the prince.

In 1576 Rajputana was in a state of ferment. It was the year of the memorable battle of Haldighat in which the flowers of Rajput chivalry were laid in ashes. The Mughals continued to make inroads in Rajputana either to extirpate the Rajputs or to bring them completely under subjection. But this infused such patriotic fervour in the hearts of the brave Rajputs that they resolved to face the aliens in race and religion, fighting them tooth and nail in the defence of the land of their adoption.

Rana Raghupati Singh, one of the Rajput Chiefs, when starting for battle, addressed his comrades-in-arms in these chosen words of patriotic fire: "My comrades! Just recall to your minds the glory and honour of our predecessors. Remember, my brave soldiers, this battle is not an ordinary one; upon its issue hangs our destiny—nay, the very name and fame of our proud race. Let not the laurels we have been winning since the Great War, (The Mahabharatha) be tarnished, and our fortunes wrecked by our defeat in this battle. If Dame Fate be against us and the Mughal Flag is at all destined to wave on our holy land, then it must be only after we have fought like lions and perished to the man."

No doubt the Rajputs were brave, but they were lacking in military discipline. Akbar at the head of war-like and trained Mughals bore the Rajputs down in a single battle, with the result that the Rajputs had to leave Rajputana and take to the fastnesses of the Aravali. Being afraid of risking open battles with the Mughals, the Rajputs took to carrying on their marauding excursions in the Mughal territories, breaking out spasmodically from their sylvan abodes, attacking the Mughal armies and fleeing away with as much booty as they could lay their hands on. Rana Raghupati Singh also took to these depredatory tactics and collecting a large following of his people began to lead a nomadic life. Akbar tried to run him down by sending many forces against him, but to no avail.

## An Army sent to arrest the Rana

Being thus foiled in his attempts, the Emperor despatched a vast army to arrest Rana Raghupati Singh. The army laid siege to his palace, and an officer, was posted at the gate with strict orders to arrest the Rana if ever he happened to venture into his palace to see his son who was then on his death-bed.

The faint twilight was gradually mellowing into the gloom of the night when the Rana paced his way towards the palace. Although it was inexpedient for him to go home where danger lurked at every point, he stood firm and resolved boldly to meet his destiny. "Come what may," he thought to himself, "I must go home, lest it should be too late to see the face of my only son in the land of the living."

When the Rana turned homeward his weary steps, a dead silence prevailed all around. As soon as he reached the gate of his palace, the officer posted on guard challenged him, "Halt! Who comes there?"

"It is I, Rana Raghupati Singh," came the bold response.

"Then, I arrest you by order of the Emperor," said the officer advancing with irons clanging in hands.

"One moment's respite, Sir," replied the Rana, "and then you may do your master's behest. You know my only son is in his last agonies of death. I beseech you in the name of God to let me see his face once and for all, and then I will most gladly submit myself to you. Remember that a true Rajput never tells lies."

The feeling tone and the supplicating manner of the Rana's speech moved the officer to his very depths, and he allowed him to pass into his palace.

## THE PLIGHT OF THE KING'S SON

The Rana with faltering steps and a perturbed heart entered the palace where a shocking scene met his eyes. His son was struggling with death; his wife alone was attending on him with all tenderness. The unexpected appearance of the Rana infused courage in her lacerated heart. He covered his son with a number of his last loving kisses, and bade his wife give him medicine regularly; and

then intended to return when his wife interrupted him. "Where are you going?" "I am going," replied the Rana, "to be arrested by the Moghul officer outside. He has been deputed by the the Emperor for my arrest, and he is waiting for me." "But what about your son?" asked the wife. "Let him die or live," replied the Rana, "it is all in the hands of the Creator—I must prove true to my plighted word. I am here only on the sufferance of the officer." The wife was astonished, but she said, "Don't sacrifice your life so voluntarily, escape through the postern." "Fie," replied the Rana appearing cut to the quick. "It ill befits the Rajput race to go back upon one's word. I will never lay perjury upon my soul for such a trifling thing as life. Come what may, I must cheerfully meet my unerring destiny."

Saying these words, the Rana stepped out of doors; and coming to the gate, addressed the officer: "Now arrest me and take me to your master. You know now what value a true Rajput attaches to his words?" The Mughal officer, who was after all a human being, was not devoid of noble sentiments. He had drunk the milk of human kindness: he could not control himself at the wonderful self-sacrifice displayed by the Rana even in the hour of dire distress. The officer replied, "Rana, your truthfulness is sufficient to melt the stoniest hearts. By your selfless conduct you have conquered my conscience which is the moral governor of the heart. I cannot find it in my heart to arrest such a brave man as you. Escape and join your friends." The Rana said, "God willing, I am spared to live, I will soon do you a good turn." And he was out of sight in the twinkling of an eye.

Ere long the Mughal Commander, who had deputed the officer to arrest the Rana, arrived on the spot, and inquired of the officer about the Rana's visit and his safe escape. The officer with a clear conscience, begotten of having done a virtuous deed, related to the commander the

whole story of how he had allowed the Rana to escape, without adding a single word of exaggeration. But this annoyed and enraged the Commander all the more, and he arrested the officer.

## THE RANA AGAIN GIVES HIMSELF UP

Now, Rana Raghupati Singh got scent of the officer's arrest. He was moved with remorse. His brave heart recoiled to think that an innocent person, to whom he owed his life, should suffer the tortures of imprisonment for him who was the real culprit. The Rana could not help going to the rescue of the officer, and he did not let the grass grow under his feet in appearing before the Mughal Commander. "Here stands Rana Raghupati Singh before you," said the Rana. "Arrest him and take him to the Emperor; but release that poor officer who for no fault of his, has been cast into irons." The Rana was forthwith arrested and both the captives were sentenced to death.

Next morning, they were brought with fetters on to the scaffold; and two headsmen stood before them with swords drawn, awaiting the last signal. The Commander then appeared on the spot to witness the execution.

Pointing to Raghupati Singh, the Commander made a short but carping speech to his soldiers thus. "Brave comrades! do you see this man before you? This is Raghupati Singh to capture whom we have all been wandering high and low without sups or drinks. God alone knows what troubles and vexations we have had to endure for him. What he deserves now is death. Let him; therefore, die the death of a traitor. This officer (pointing to the Mughal officer) has played the delinquent; he has proved faithless to his salt. For a soldier there is no other crime greater than deserting his master in need. Even death is not sufficient for such a man."

Scarcely had these words been uttered when there arose a stir in the assembly. Their attention was drawn by the clattering of hoofs. Presently; a body of troopers galloped on to the spot; among whom was Akbar himself.

No sooner had he dismounted than Akbar began to address the sentenced officer thus. "My dear officer, you are after all a man; to err is human. However, you have erred on the right side. However cruel a man might be, he is sure to be moved with compassion at the sufferings of others. I know your heart was moved with pity for this Rajput's troubles, so you allowed him to be at large. You are not to blame for the kindness that you showed to a brave man. I therefore forgive you." The officer thereupon bowed to the Emperor full of gratitude for his release and pardon.

## A TRIBUTE TO RAJPUT BRAVERY

Then turning to Rana Raghupati Singh, Akbar said "I never knew before that the Rajputs are so true to their words. I am overjoyed to see your bravery, and above all your integrity and chivalry that prompted you to come to the rescue of your deliverer by staking your own life to save his. With full appreciatian of the noble qualities whereever noticed, I grant you your life."

The Rana thereupon kneeled down before Akbar full of gratitude, and began. "Simply by kind words and a generous gesture; my lord; you have this day subdued the heart of Raghupati whom you with all your vast army could not bring to bay. My enemy though you are; I must own that you know what bravery really is; and you really know how to rule over the hearts of men. Upon my word, my lord, I will always in future sheathe my sword against you and your house."

— VIRTUE IS ITS OWN REWARD. —